4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண்: எம். 8798.

கதிர் 11) மதுரை 26-4-73 வியாழன் (மலர் 97

### நாடாளுமன்றத்திற்கு உரிமை உண்டு

புதுடெல்லி, ஏப் 24—

அரசியல் சட்டத்தின் எந்த திருத்தத்தையும் செய்ய நாடாளுமன்றத்திற்கு உரிமை உண்டு என்ற 24-வது அரசியல் சட்ட திருத்தம் செல்லுபடியாகும் என தீர்ப்பளிப்பதற்கு இந்திய தலைமை நீதி மன்றத்(சுப்ரீம்)கோர்ட்) திற்கு உரிமை உண்டு என தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது.

### வேலை நிறுத்தம் 27-ந் தேதி கே. ஜி. போஸ் அறிவிப்பு

சோழிக்கோடு, ஏப் 25—

மத்திய அரசினர் நியமித்த சம்பளக்கமிஷனின் சிபாரிசுகளை மத்திய அரசு ஊழியர்கள் அதை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்று திட்டவட்டமாகத் தபால், தந்தி ஊழியர்களின் தேசியக் கூட்டமைப்பின் (என். எப். பி டி இ) தலைவர் தோழர் கே. ஜி போஸ் கூறினார்.

தங்களது கோரிக்கைகளைப் பெற வேலை நிறுத்தம் உள்ளிட்ட காலவரையற்ற கிளர்ச்சியில் மத்திய ஊழியர்கள் ஈடுபடுவார்கள் என்றார்.

இம்மாதம் 27-ந் தேதியன்று காலவரையின்றி வேலை நிறுத்தம் செய்ய அகில இந்திய ரயில்வே ஊழியர்கள் சம்மேளனம் செய்துள்ள முடிவை தபால், தந்தி ஊழியர்கள் வரவேற்பதாக தோழர் போஸ் கூறினார்.

செங்கடலெனச் சீறி எழுந்த பிரும்மாண்டமான ஊர்வலம்

# எர்ணாகுளத்தில் ஏழு லட்சம்பேர் அணிவகுப்பு

எர்ணாகுளம், ஏப். 22—

**அம்மம்ம! இவ்வளவு பெரிய ஊர்வலத்தை என் வாழ்நாளில் இதுநாள்வரை கண்டதில்லை என்று, தமிழ் நாட்டிலிருந்து வந்தவர்களெல்லாம் புருவந்தூக்கி வியந்து கூறும் அளவுக்கு, எர்ணாகுளம் மாநாட்டு ஊர்வலம், அவ்வளவு நீளமாகவும், அவ்வளவு அலங்காரமாகவும், அவ்வளவு ஆவேசமாகவும், அரசியல் மிக்கதாகவும் இருந்தது.**

**பம்பை மேளங்கள் கிடுகிடாய்த்து ஜமாய்க்க, பாண்டு வாத்தியங்கள் இன்னிசை முழங்க, பல்வேறு மொழிகளிலும் இடி முழக்க உரிமைக்குரல் எண்டிசையும் அதிர- 2 லட்சத்துக்கு மேற்பட்டோர் கலந்துகொண்ட ஓர் ஊர்வலம், எர்ணாகுளம் வாலரி வட்டத்திலிருந்து புறப்பட்டது.**

**இதேபோன்று, இதைவிடப் பெரிதான மற்றும் 2 ஊர்வலங்கள், இதே எர்ணாகுளத்தின் வெவ்வேறு இடங்களிலிருந்தும் இதே அலங்காரக் காட்சிகளுடன், ஆவேச முழக்கமிட்டு புறப்படலாயின.**

**இந்த மூன்று ஊர்வலங்களையும் கேரள நாட்டின் பாட்டாளி வர்க்கத் தலைவர்கள் இ. எம். எஸ். நம்பூதிரிபாடும், ஏ. கே. கோபாலனும் தொடங்கி வைத்தார்கள்.**

ஒரு இடத்தில் கூடி, ஒரே ஊர்வலமாக நடத்துவதை தமிழ் நாட்டில் பார்த்திருக்கிறோம். காரணம் ஒரு லட்சம் பேர் கூடி நிற்கக் கூடிய மைதானமாக இருந்தால் அங்கு திரண்டு, அங்கிருந்து ஊர்வலமாக புறப்படலாம். அப்படியே பெரிய மைதானமாக இருந்தாலும் போதாது; ஒரே இடத்திலிருந்து பல லட்சம் பேரும், ஒழுங்காகவும், கட்டுப்பாடாகவும் ஊர்வலமாகச் சென்றால், இரவு 12 மணி ஆனாலும் பொதுக்கூட்டத் திடலை அடைய முடியாது.

ஆனால்தான் ஒழுங்காகவும், கட்டுப்பாடாகவும் உள்ள ஊர்வலத்தைக் காலா காலத்தில் நடத்தி முடிக்கவும், நகரத்திலுள்ள சகல மக்களும் கண்டு களிக்கவும் ஏற்ற முறையில் — இப்படி 3 இடங்களிலிருந்து மூன்று ஊர்வலங்களாகப் புறப்பட்டு வந்தன.

ஒவ்வொரு ஊர்வலத்திலும் லட்சத்துக்கு மேற்பட்டவர்கள் கலந்துகொண்டார்கள்.

ஒவ்வொரு ஊர்வலமும் 5 மைல், 6 மைல் தூரம் தூரம் பவனி வந்தது.

எர்ணாகுளம் நகரிலும் எர்ணாகுளத்தை யடுத்துள்ள 10 மைல் சுற்றுவட்டாரத்திலும் உள்ள கலூரிகள், உயர்நிலைப்பள்ளிகள், பல்கலைகழகம் முதலான கட்டிடங்களில் விருந்து வசதி செய்யப்பட்டுள்ள சிஐடியூ மாநாட்டுப் பிரதிநிதிகளும் சகோதரப் பிரதிநிதிகளும், இந்த மூன்று ஊர்வலங்களிலும் கலந்து கொண்டார்கள்.

#### பாலாரி வட்ட ஊர்வலம்

பாலாரி வட்டத்திலிருந்து பிற்பகல் 3 மணிக்கு தோழர்கள் இ. எம். எஸ். நம்பூதிரிபாடும், ஏ. கே. கோபாலனும் வாழ்த்துரை வழங்கி ஊர்வலத்தைத் துவக்கிவைத்தார்கள்.

இந்த ஊர்வலத்தில் தமிழ் நாட்டுப் பிரதிநிதிகளும் ஆந்திரப் பிரதேஷ் பிரதிநிதிகளும், மகாராஷ்டிரா பிரதிநிதிகளும், ராஜஸ்தான் பிரதிநிதிகளும், பஞ்சாப், ஒரிசா, கர்நாடகம், பீகார், கோவா, இமாசலப்பிரதேசப் பிரதிநிதிகளும் அணிவகுத்து வந்தார்கள். அவர்களைப் பின்தொடர்ந்து லட்சத்துக்கு மேற்பட்ட கேரளத் தொழிலாளர்களும், விவசாயிகளும் தாய்க்குலத்தினரும் அணியணியாய் வந்து கொண்டேயிருந்தார்கள்.

செப்பு மொழிதான் வெவ்வேறாக இருந்தனவே தவிர, அவர்கள் அனைவரும் உள்ளத்தால் ஒருவராகவே தான் இருந்தனர். அனைவருடைய முழக்கொலிகளிலும் 'வீர வியட்னாம் ஜிந்தாபாத்! சிஐடியூ ஜிந்தாபாத்!—என்ற முழக்கொலிகள் மொழிமாற்றமில்லாமல் ஒரே மொழியாகி விட்டன.

#### முழக்கொலிகள்

ஊர்வலத்தின் முகப்பிலே மகாராஷ்டிரா பிரதிநிதிகள், வியட்காங் சிப்பாய்களைப்போன்று தொப்பிகளை அணிந்து சிங்கம் போல் கர்ச்சித்துவந்த காட்சியானது கண்டோர் அனைவரையும் மெய்சிலிர்க்க வைத்தது.

#### ஆந்திரத் தோழர்கள்

அடுத்துவந்த ஆந்திரப் பிரதிநிதிகள், "வீரவியட்னாம் வர்தில்லலி! விப்லவம வர்தில்லலி!"—என்று வாழ்த்தொலிகளை முழக்கி வந்தனர். பஞ்சத்தின் பிறப்பிடம் இந்திராகாந்தி என்ற அர்த்தம்பட, 'இந்திரா காந்தி"—என்று ஒருவர் குரல் எழுப்பி, மற்றவர்கள் "கருவுக்கு காந்தி"—என்று பதில்குரல் எழுப்பினர்கள்—இந்திரா காந்தி! கருவுக்கு காந்தி — இந்திரம்மா சோஷலிஸம்—நாடகம் பூடகம்!" என்றும்—பே கமிஷன் ரிப்போர்ட் தோஷிவையாளி (சம்பளக் கமிஷன் அறிக்கையை வீசி எறி)— என்றும், "மிஸ்ஸா சட்டம் ரத்துச் செய்யாயி (உள்நாட்டுப் பராமரிப்புச் சட்டத்தை ரத்துச் செய்க!) என்றும் முழக்கிச் சென்றார்கள் வேகராவே சார்மிகா! வேகராவே கர்ஷிகா! ஆகாசமந்தும் ரத்தின ஜண்டா அருணபதாசம் ஜேய் ஜேய்!—என்ற பாட்டையும் உற்சாகமாகப் பாடினார்கள். இந்திரா காந்திக்கு வலது கம்யூனிஸ்டுகள் பல்லக்குத் தூக்குகிறார்கள் என்பதை, 'இந்திரம்மா பல்லக்கு—அச்சுதமேனன் ஓஹோ! ஓஹோ! என்று—கேலி ஒலி எழுப்பினர்.

#### ராஜஸ்தான்

ராஜஸ்தான் பிரதிநிதிகள், வேலை கொடு! இல்லையேல் அலவன்ஸ் கொடு!—என்ற கருத்துப்பட, "காம் தேவ் நைத்சோ பத்தா ஹோ" என்று கோஷித்தார்கள்"

"காம் கார் ஏக் ஜுட் டிச் சோ விஜயா சே!"—வாழ்த்தொலி முழக்கினர்.

#### தமிழ்நாடு

அடுத்து, தமிழக சிஐடியூ தலைவர் தோழர் கே. ரமணி தலைமையில், தமிழ் நாட்டுத் தோழர்கள் அணிவகுத்து வந்தார்கள் 'சிக்காகோவின் தெருவுகளில் தியாகிகள் சிந்திய இரத்த மதில்—மக்கியெடுத்த தோர் கொடிகளை ஏந்தி—முன்னேறுங்கள் தோழர்களே!...என்று முழக்கினார்கள். அன்னிய மூலதனம் ஆயிரம் கோடி—அடித்திடும் லாபம் பல கோடி"—என்று ஒலித்தார்கள். வேலை வாய்ப்பு அடிப்படை உரிமை—வேலை கொடுப்பது அரசின் கடமை—என்று முழக்கினார்கள்.

"ஓடுது பார் ஓடுது பார்! அமெரிக்கப் படைகள் ஓடுது பார்!... அடியும் உதையும் இடியும் வாங்கி அமெரிக்கப் படைகள் ஓடுது பார்!...விரட்டுது பார்! விரட்டுதுபார்! வியட்னாம் படைகள் விரட்டுது பார்!"—என்று கர்ச்சித்தனர். கோரிக்கை வைத்தது போதாது! கோரிக்கைத் தெளிவோடு போராடு! வெண்மணித் தீயில் நாற்பத்தி நாலும்—வெந்து மடிந்தது போதாதே!"—என்றும் முழக்கினார்கள்.

என்று தொழிலாளர்கள் ஒன்றுபட்டால் வெற்றி உறுதி என்று முழக்கினர்.

#### கோவா பிரதிநிதிகள்

கோவா பிரதிநிதிகள் போர்த்துகீஷிய மொழியிலும், மராத்தி மொழியிலும், கொங்கினி மொழியிலும் முழக்கிக் கொண்டு, சென்றார்கள்.

#### மைசூர் பிரதிநிதிகள்

மைசூர் பிரதிநிதிகள் கன்னட மொழியில், சிஐடி. யூ. கிராயி வாகினி!! கார்மிக ஓராட்ட கிராயி வாகினி"— என்று தொழிலாளர்போராட்டங்களுக்கு



வடவியட்நாம் பிரதிநிதி தோழர் டாக்டர் டோடாவோ-தியன் அவர்களும் தோழர் பி. டி ரணதிவேயும்.



ஹனோய் நகர வீரர்களால் சுட்டு வீழ்த்தப்பட்ட பி. 52 ரக அமெரிக்க யுத்த விமானத்தின் சிதறல்களைக்கொண்டு செய்யப்பட்ட அழகிய பூக்குவளையையும்—

சுட்டு வீழ்த்தப்பட்ட அமெரிக்கபி. 52 ரகவிமானத்தை ஒரு எருமை மாடு இழுத்துச் செல்லுவது போன்ற ஒரு சித்திரச் சிலையையும்—

சி. ஐ. டி. யூ. மாநாட்டுக்கு வியட்னாம் தலைவர்கள் பரிசளித்தனர்.

# அ.தி.மு.க. தனது அரசியல் நிலையை தெளிவுபடுத்துமா?

## தோழர் பி. ராமமூர்த்தி அறிக்கை

மதுரை, ஏப். 24—

**இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி கீழ் வரும் அறிக்கையை விடுத்துள்ளனர்:-**

தி. மு. க, இந்திரா காங்கிரஸ் ஆகிய கட்சிகளின் மக்கள் விரோத, ஜனநாயக விரோத கொள்கைகளையும், சிண்டிகேட் காங்கிரசின் பிற்போக்குத் திட்டத்தையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி தொடர்ந்து மரணில்லாது எதிர்த்து வந்திருக்கிறது. திமுகழக அமைச்சரவையின் லஞ்ச ஊழல் பிரச்னையில் அக்கட்சியில் பிளவு ஏற்பட்டு அதிமுக தோன்றிய போது, அதிமுகவுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வேண்டுகோள் விட்டது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கைகளை எதிர்த்தால் மட்டும் போதாது, இந்திரா காங்கிரசின் மக்கள் விரோத, ஏகபோக முதலாளிகளுக்குச் சாதகமான கொள்கைகளையும் அதிமுக எதிர்த்துப் போராட வேண்டும் என்று வேண்டுகோள் விட்டது இந்திரா காங்கிரஸ் கட்சியின் இக் கொள்கைகளுக்கு எதிராகப் போராடும் உழைப்பாளிகளின் போராட்டங்களையும், உழைப்பாளிகளின் ஜனநாயக உரிமைகளையும், தொழிற்சங்க உரிமைகளையும், இந்திரா காங்கிரஸ் சர்க்கார் நசுக்கிக் கொண்டு வருகிறது என்பதையும் சுட்டிக் காட்டியது. இதற்காக இந்தியப் பாதுகாப்புச் சட்டம், உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்பு சட்டம் ஆகியவற்றின் கீழ் எண்ணற்றவர்கள் விசாரணையின்றி சிறைப்படுத்தப்பட்டுள்ளனர். இந்திரா காங்கிரஸ் கட்சியானது ஒரு கட்சி சர்வாதிகாரத்தை ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது இதற்காக பார்லிமெண்டரி ஜனநாயகமுறையைநசுக்குவதற்கு அது தயங்குவது கிடையாது. மேலும் இந்திரா ஆட்சியின் கீழ் லஞ்ச ஊழல் முதற்கு முன் என்றும் கேட்டிராத அளவுக்கு வளர்ந்து விட்டது. இவைகளையெல்லாம் நாங்கள் சோடிட்டுக் காட்டியிருந்தோம்.

#### எம். ஜி. ஆர். பேச்சு

இவ்விஷயங்களை அதிமுக தலைவர்கள் உணரத் தவறிவிட்டார்கள் என்பது வருந்தத் தக்கது. அதன் தலைவர் திரு எம். ஜி ராமச்சந்திரன் வேலூரில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில், இந்திரா காந்தியைக் கொள்கை ரீதியாக ஆதரிப்பதாக அறிவித்தார்.

ஆயினும், இப்போது ஒரு புது நிலை எழுந்துள்ளது திண்டுக்கல் நாடாளுமன்ற உபதேர்தலில் அதிமுகவும், இந்திரா காங்கிரசும் உடன்பாட்டுக்கு வர முடியவில்லை. இரண்டு கட்சிகளும் இத் தேர்தலில் போட்டியிடுகின்றன.

இந்தத் தொகுதி தனக்குத் தான்வேண்டும் என்று இந்திரா காங்கிரஸ் வலியுறுத்துவதானது அது தன்னுடைய ஒரு கட்சி சர்வாதிகாரப் போக்குக்காக எதையும் செய்யும் என்பதையும், நாம் அக்கட்சியைப் பற்றி இதுவரையில் கூறிவந்ததையும் ஊர்ஜிதப்படுத்துகிறது. இந்திரா காங்கிரஸ் கட்சியின்பால் நாம் எடுத்த நிலை சரியானது என்பதை இச்சம்பவம் அதிமுக தலைவர்களுக்கு உணர்த்தியிருக்க வேண்டும். துரதிருஷ்டவசமாக இன்று காலையில் வெளிவந்துள்ள பத்திரிகைச் செய்திகளிலிருந்து இந்த உணர்வு அவர்களுக்கு ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

சென்னையில் 23—4—73ம் தேதியன்று பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் தன்னுடைய கட்சி வேட்பாளர் பெயரை திரு எம் ஜி ஆர் அறிவித்தபோது சில முக்கியமான காங்கிரஸ் தலைவர்கள் வந்ததாகவும் அவர்களோடு தனியாக அதிமுக தலைவர்கள் அரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்ததாகவும் பத்திரிகை செய்திகள் கூறுகின்றன,

அக்கூட்டத்துக்கு பிறகு திரு எம் ஜி ஆர் தன்னுடைய தேர்தல் பிரச்சாரம் திமுகவை மட்டு எதிர்த்தே இருக்கும் என்றும், இந்திரா காங்கிரசை எதிர்க்க மாட்டோம் என்றும் சொன்னதாகசெய்தித் தாள்கள் கூறுகின்றன.

இந்தச் சந்திப்புக்கு ஏதாவது முக்கியத்துவம் உண்டா என்ற கேள்விக்கு "இப்போது கூற முடியாது பொறுத்திருந்து பாருங்கள்" என்று எம் ஜி ஆர் பதிலளித்ததாகவும் செய்தித் தாள்கள் கூறுகின்றன.

இதுதான் அதிமுக தலைவர்களின் நிலையாக இருக்குமானால் திண்டுக்கல் உபதேர்தலில் அவர்களுக்கும், இந்திரா காங்கிரசுக்கும் இடையே ஏற்பட்ட மோதல் தற்செயலானது; அந்தத் தொகுதி யாருக்கு வேண்டுமென்ற சச்சரவை தீர்த்துக் கொள்ள முடியாத காரணத்தினால் ஏற்பட்டது. அதிமுகவின் அரசியல் நிலையில் எவ்வித மாற்றமும் இல்லையென்றே யாகும்.

#### அதிமுக நிலை என்ன?

திண்டுக்கல் உபதேர்தல் நாடாளுமன்ற தொகுதிக்காக நடக்கும் தேர்தலாகும். அதிமுக வேட்பாளர் தேர்ந்தெடுக்கப்பட்டால் நாடாளுமன்றத்தில் இந்திரா காங்கிரசின் கொள்கைகளின்பால் அவர் எடுக்கும் நிலை முக்கியமானதாகும். நாடாளுமன்றத்தில், டெல்லியில் நிரம்பி வழிந்தோடும் லஞ்ச ஊழலை

(4-ம் பக்கம் பார்க்க)

# தோழர் என்.சங்கரய்யா வேட்பு மனு தாக்கல்

## ஆயிரக்கணக்கானோர் கலந்துகொண்ட ஊர்வலம்

மதுரை, ஏப். 24—

ஆயிரக்கணக்கான தோழர்களுடன் பெரும் ஊர்வலமாகப் புறப்பட்டுச் சென்று தோழர் என். சங்கரய்யா இன்று (செவ்வாய்) திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதி உபதேர்தலுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் வேட்பு மனு தாக்கல் செய்தார்.

இந்த வேட்பு மனு தாக்கல ஊர்வலம் இன்று காலை 10-15 மணியளவில் மேல மாசி வீதி-வடக்கு-மாசி வீதி சந்திப்பிலிருந்து புறப்பட்டது.

இந்த ஊர்வலத்துக்கு கட்சியின் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பால சுப்ரமண்யம், மதுரை மாவட்டச் செயலாளர் தோழர் ஏ. பி பழனிச்சாமி, நகர்ச் செயலாளர் தோழர் வி கார்மேகம், மதுரைத் தாலுகாச் செயலாளர் தோழர் கே பி. ஜானகியம்மாள் ஆகியோர் தலைமை வகித்து முன் சென்றனர்.

#### மலர் மாலைகள்

தோழர் சங்கரய்யாவுக்கு முதலாவதாக மாதர் சங்கத்தின் சார்பிலும், அடுத்து கட்சிக் கிளைகளின் சார்பிலும் மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

வழி நெடுக பலவிடங்களில் வேட்பாளர் தோழர் சங்கரய்யாவுக்கு மலைகளும், துண்டும் அணிவிக்கப்பட்டன.

கொளுத்தும் வெய்யிலையும் பொருட்படுத்தாது மாதர்களும், இளைஞர்களும், மாணவர்களும், தொழிலாளர்களும், சுற்றுப் புறப் பகுதிகளிலுள்ள விவசாயிகளும் தாராளமாகக் கலந்து கொண்டு கொள்கை முழக்கங்களை எழுப்பினர்.

#### முழக்கங்கள்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வாழ்க! இடது சாரி ஜனநாயக சக்திகளின் ஒற்றுமையை உருவாக்குவோம்! இந்திரா காந்தி முற

(4-ம் பக்கம் பார்க்க)

# தீக்கதிர்

## கேட்டதோ உணவு கிடைத்தது துப்பாக்கிச் சூடு

நாசிக் அருகே சின்னர் என்ற இடத்தில் ஏப்ரல் 22-ம் தேதியன்று ஐந்து பேர் துப்பாக்கியால் சுட்டுக்கொல்லப்பட்டிருக்கின்றனர். மற்றும் எண்ணற்ற பேரின் உடல்களை போலீஸ் துப்பாக்கிக் குண்டுகள் துளைத்து அவர்கள் குற்றுயிராய்க் கிடக்கின்றனர்.

ஏனிந்தத் துப்பாக்கிச்சூடு?

இந்தச் சம்பவத்தின்போது 8000 பேர் ஊர்வலம் வந்தார்கள். அவர்கள் இந்த ஆட்சியாளரிடம் எந்தப் பெரிய கோரிக்கையையும் எழுப்பிவிடவில்லை. நியாய விலைக்கடைகள் மூலம் போதிய உணவு தானியங்கள் சப்ளை செய்யுமாறு கோஷம் எழுப்பினார்கள்.

மற்ற மாநிலங்களைப் போலவே மகாராஷ்டிர மாநிலத்திலும் இன்று கடும் பஞ்சம் ஏற்பட்டுள்ளது. இந்த நிலைமை மாதக்கணக்காக நீடித்தும் இந்திரா காங்கிரஸ் அரசு மக்களைப் பஞ்சத்தின் கோரப்பிடியிலிருந்து மீட்க எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

ஏழை மக்களைப் பற்றி இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் பேசாத நாளுண்டா?

இன்று பஞ்சம் ஏழை மக்கள் வீடுகளின் கதவை தட்டிக் கொண்டிருக்கும் போது இந்த அரசு என்ன நடவடிக்கை எடுத்தது?

அரசாங்கத்தின் இந்த அலட்சியப் போக்கு மக்களை சீறிஎழச் செய்திருப்பது இயல்பே.

இடைத் தேர்தலின்போது "இந்திராவுக்கு ஜே" போட்ட மக்களெல்லாம் இந்த ஆட்சிக்கு எதிராக தெருவில் இறங்கி ஆர்ப்பாட்டம் செய்கின்றனர்.

மக்கள் எந்தக் கோரிக்கையை எழுப்பினாலும் இந்திரா ஆட்சி முடிவாக ஒரேயொரு பதிலைத்தான் வைத்திருக்கிறது, கோரிக்கைக்குப் பதிலளிக்க ஆட்சியாளர்களின் வாய் பேசாது. துப்பாக்கிதான் பேசும்.

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் உணவு கிடைக்காமல் மக்கள் பஞ்சத்தில் வாடியபோது நேரு பேசியதென்ன? உணவுப் பொருள்களைப் பதுக்கி வைக்கும் கள்ள மார்க்கெட்காரர்களை பக்கத்திலுள்ள விளக்குக் கம்பத்தில் தூக்கிலேற்றுவேன் என்று முழக்கமிட்டார்.

ஆனால் அவர் ஆட்சிபீடம் ஏறியதும் கள்ள மார்க்கெட்காரர்களைத் தூக்கில் போடவில்லை. அவர்களுடன் உறவாடினார்.

அதற்குப் பதில் உணவுகோரி ஆர்ப்பாட்டம்செய்த மக்களைத்தான் நேரு ஆட்சி சாகடித்தது. நேரு ஆட்சியில் கூச்பீகாரில் உணவு கோரி ஊர்வலம் வந்த மக்கள் மீது போலீஸ் துப்பாக்கியால் சுட்டதை யாரும் மறந்திருக்க முடியாது.

கால் நூற்றுண்டாகியும், நான்கு ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றிய பின்னரும் அன்று காங்கிரஸ் எந்தக் கொள்கையைக் கடைப்பிடித்ததோ அதே கொள்கையைத்தான் இன்றும் கடைப்பிடிக்கிறது. ஏழை மக்களைப் பற்றி இனிய வார்த்தைகளைப் பேசியே நேரு செல்வாக்குப் பெற்றார்.

இந்திராவும் மக்களிடம் ஓட்டுகளை வாங்குவதற்காக "வறுமையை ஒழிப்போம்" என்று கோஷம் எழுப்பினார். ஆனால் மக்கள் உணவு கிடைக்காமல் ஆர்ப்பாட்டம் செய்தபோது இந்த ஆட்சியிடமிருந்து அவர்களுக்குக் கிடைத்த பரிசு என்ன?

அன்று கிடைத்தது துப்பாக்கிச் சூடுதான். இன்றும் கிடைப்பது துப்பாக்கி சூடுதான். இந்த நாட்டில் காங்கிரஸ் ஆட்சி இருக்கும்வரை மக்களுக்கு வயிறாரச் சாப்பிடுவதற்கு உணவு கிடைக்கும் என்று இவ்வளவு கால நீண்ட அனுபவத்துக்குப் பின்னும் யாராவது கனவு காண முடியுமா?

## நாடாளுமன்றத்தில் ஆளும் கட்சியினரின் அடாத போக்கு

புதுடில்லி, ஏப 23—

புதியதாக நாடாளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மதுலிமாயி இரண்டு ஆண்டு இடைவெளிக்குப்பிறகு பாராளுமன்றத்திற்கு ஏப் 23ந் தேதி வந்தார். முதல் நாள் விஜயமே பரபரப்போடு நடைபெற்றது.

### சபாநாயகர் குறுக்கீடு

பீஹாரின் பங்காத் தொகுதியிலிருந்து இடைத் தேர்தலில் வெற்றி பெற்ற மதுலிமாயி தனது முதல் பேச்சில் பயன்படுத்திய சில வார்த்தைகளை சபாநாயகர் தில்லான் குறுக்கிட்டு தடுத்தார்.

மதுலிமாயி பதவிப் பிரமாணத்திற்கும் பதிவேட்டில் கையெழுத்திட்டதற்கும் இடையே நடைபெற்ற நிகழ்ச்சிகளை, நிகழ்ச்சிக் குறிப்புகளிலிருந்து நீக்கிவிடும்படி சபாநாயகர் கூறினார்.

பதவிப் பிரமாண வாசகத்தை வாசித்துவிட்டு, அவரது நாடாளுமன்ற அலுவலகத்தை நிச்சயிக்கும் முன்பே, தனக்குரிய இடத்திற்குச் சென்று சில விஷயங்களைக் குறிப்பிட்டார். இதனை ஆட்சேபித்து ஆளுங்கட்சி உறுப்பினர்கள் கூச்சலிட்டார்கள். அவர்கள், மதுலிமாயி முதலில் சபாநாயகரோடு கை குலுக்கிய பின்பு, ரிஜிஸ்டரில கையெழுத்திட்ட பின்பே தனது இடத்தில் அமரவேண்டும் என்றார்கள்.

எனினும், மதுலிமாயி கூச்சலுக்கிடையே தனது ஆசனத்தில் அமர்ந்தார். ஆனால் அதிகாரியொருவர் முறைப்படி சில முறைகளை முடித்துவிட்டு தனது இடத்தில் அமரும்படி கூறி மதுலிமாயியை அழைத்துச் சென்றார்,

மதுலிமாயி, ரெஜிஸ்டரில்

(4-ம் பக்கம் பார்க்க)

# செத்து பிறக்கப்போகும் ஐந்தாவது திட்டம்

## விளைவுகள் பயங்கரமாக இருக்கும்

"முதலாவதாக ஐந்தாவது திட்டத்தின் அணுகுமுறை அறிக்கையின் மை உலரும்முன்பே 1972-ல் ஏற்பட்ட 12 சதவீத விலைவாசி உயர்வானது மாறுத விலைவாசி பற்றிய அனுமானத்தைச் சீர்குலைத்துவிட்டது 1973-ம் ஆண்டின் முதல் இரண்டு மாதங்களில் விலைவாசிகள் மேலும் அதிகமாகக் கூடியுள்ளன. பிப்ரவரி முடிவில் பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்டபிறகு விலைவாசி ஏற்றம் மேலும் அதிகரித்துள்ளது. திட்டத்தின் 5 ஆண்டுகாலம் முழுவதும் ஏற்படக்கூடிய விலைவாசி உயர்வையும் கணக்கில் எடுத்துக்கொண்டு ஒருவர் பார்த்தால், இக்கொள்கைகள் பின்பற்றப்படும் நிலையில் 51 ஆயிரம் கோடி ரூபாயானது, திட்ட இலக்குகளை நிறைவேற்றுவதற்கு தேவையாக உண்மையான பணத்தின் மதிப்பைவிட மிகக் குறைவாகவே இருக்கும் என்பதைக் காணலாம்.

இரண்டாவதாக, 1974-ம் ஆண்டு திட்டம் அமலாக்கும்போது இருக்கக்கூடிய பொருளாதார அமைப்பைப் பற்றிய அனுமானமானது பொய் என்று நிரூபிக்கப்பட்டுவிட்டது. 1970-ல் ஸ்தாபக மாநாட்டிற்கு நான் அளித்த அறிக்கையிலேயே 4-வது திட்டம் ஏற்கனவே குழப்பத்தில் சிக்கியிருப்பதை குறிப்பிட்டிருந்தேன். அடுத்த இரண்டு ஆண்டுகளில் அதன் நிலை மேலும் மோசமாகிவிட்டது. ஒவ்வொரு துறையிலும் கிட்ட இலக்கைக் காட்டிலும் மிக மிக குறைவானதே நிறைவேற்றப்படும். இலக்காக உள்ள 81 லட்சம் டன் உரத்துக்கு பதிலாக 60 லட்சம் டன் உரக்குத்தான் இலக்காக உள்ள 8 கோடி டன் நிலக்கரிக்குப் பதிலாக 7 கோடி டன் நிலக்கரி; பிற பொருட்களிலும் இது போன்றே, சகல துறைகளிலும் திட்டமானது மிக மோசமாக தோல்வியடையப்போகிறது என்பதை பரந்த பகுதிகளில் தொழில்களையும், விவசாய வேலைகளையும் ஸ்தம்பிக்கச் செய்துள்ள நாடு முழுவதிலுமுள்ள மின்சாரத் தட்டுப்பாடு தெளிவாகக் காட்டுகிறது.



### ஏற்றுமதிச் சங்கடங்கள்

மூன்றாவதாக, ஆண்டு ஒன்றுக்கு ஏற்றுமதியில் 7 சதவீத அதிகரிப்பு என்பதும் பரிதாப முடிவையே அடையும். உலக முதலாளித்துவ நெருக்கடியும்; குறிப்பாக, நாணய நெருக்கடியும், முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் தங்கள் நாணயங்களுக்கும் டாலருக்குமிடையே உள்ள நாணய மாற்று விகிதத்தை முடிவு செய்ய இயலாமல் இருப்பதும் பின் தங்கிய நாடுகளுக்கு மிகக் கடினமான சூழ்நிலையை ஏற்படுத்தியுள்ளன. பின்தங்கிய நாடுகளின் நாணயங்களது நாணய மாற்று விகிதமானது நாளுக்கு நாள் மாறுபடும் அளவிற்கு — வர்த்தகச் சூதாட்டத்தில் ஈடுபடுகின்றவர்களது முன்பே கூறமுடியாத விருப்பு, வெறுப்புகளுக்கு ஏற்ப நாளுக்கு நாள் மாறுமளவிற்கு மிகக்க விடப்பட்டிருக்கின்றன இச்சூழ்நிலைகளில் நமது ஏற்றுமதிப் பொருட்களுக்கு என்ன விலை கிடைக்குமென்பது யாருக்கும் முன்னதாகவே தெரியாது. எனவே, பரிவர்த்தனைகளில் ஈடுபட ஏற்றுமதி செய்பவர்கள் விரும்பமாட்டார்கள். இதனோடுகூட பிரிட்டனும் ஐரோப்பிய பொதுச் சந்தையினுள் பிரவேசித்திருக்கிறது. இதனால், வழக்கமாக நாம் பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்கின்ற பொருட்கள் ஒரு திடீரென்ற பெருங் காக்குதலுக்கு உள்ளாகி இருக்கின்றன. ஆப்பிரிக்காவிலுள்ள முன்னாள் பிரெஞ்சுக்காலனி நாடுகளுக்கு பொதுச் சந்தையினர் ஒரு குறிப்பிட்ட கோட்டா வைத்திருக்கின்றனர். பிரிட்டன் உட்பட ஐரோப்பிய பொதுச் சந்தை நாடுகள் அனைத்திற்கும் நாம் ஏற்றுமதி செய்யும் பொருட்களின் மதிப்பு இக்கோட்டாவிற்குள் அடங்க வேண்டும் பொருளாதார நெருக்கடியின் பிடிப்பில் மாட்டிக் கொண்டு, ஒரு கடுமையான வியாபார யுத்தத்தில் ஈடுபட்டுள்ள ஏகாதிபத்திய நாடுகள், நமது ஏற்றுமதி இலக்குகளைக் சீர்குலைத்துவிடும். மேலும், பங்களா தேசத்தில் இருந்த நிலைகளின் காரணமாக 1971, 1972-ம் ஆண்டுகளில் சணல், தேயிலை ஆகியவற்றின் ஏற்றுமதியில் ஏற்பட்ட கணிசமான அதிகரிப்பு இனிமேல் இருக்காது.

இவையெல்லாம் வேலைப்பளுவை அதிகரிப்பதற்கான முயற்சிகளுக்கும்; உழைப்புச் சிக்கன நடவடிக்கைகள், எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர் சாதனங்களை அதிகப்படியாக பயன்படுத்துவது, தொழிலாளர்கள் பெற்றுள்ள ஒரு சில வெற்றிகளைக்கூட தாக்கும் நடவடிக்கை ஆகியவற்றுக்கு இட்டுச் செல்லும். ஏற்றுமதியை அதிகப்படுத்துவதற்கு மிகக் கடுமையான போட்டி நிலவுகின்ற மார்க்கெட்டில் நமக்கு சரக்குகளின் விலைகள் பலியாக்கப்பட வேண்டும் என்ற காரணம் காட்டப்படும். வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினை மேலும் மோசமடையும், மக்கள் அனைவருக்கும் பாதகமான முறையில்; ஏற்றுமதியாளர்களுக்கு மேலும் அதிகமான சப்ஸிடிகள் (மானியங்கள்) வழங்கப்படும் என்பதும் தாம் இதன் பொருள்.

### ஏகபோகவாதிகளுக்கான திட்டமும் மக்கள் மீது தாக்குதலும்

இவ்வாறாக, அரசாங்கம் திட்டமிடுகின்ற 5-வது திட்டமானது—ஒருபுறத்தில், மக்களின் துன்பத்தை அதிகப்படுத்தும்; வறுமையையும் வேலை இல்லாத் திண்டாட்டத்தையும் அதிகப்படுத்தும் மறுபுறத்தில் ஏகபோகவாதிகளை மேலும் கொழுக்கச் செய்யும்; கறுப்புப்பண பொருளாதாரத்தை மிக அதிகமாக வலுப்படுத்தும்; ஊழலைப் பெருக்கும் ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்குமிடையே உள்ள இடைவெளி மேலும் விரிவடையும்; பொருளாதாரத்திலும் நாட்டின் அரசியல் வாழ்க்கையிலும் ஏகபோகவாதிகள் கொண்டுள்ள பிடிப்புகளும் இறுக்கமடையும். நாட்டின் செல்வத்தை ஏகாதிபத்தியவாதிகளும் அன்னிய ஏகபோகவாதிகளும் கொள்ளையடிப்பது மிக அதிகமாக உயரும் சுயசார்பு என்பது ஒரு கானல் நீராகிவிடும் சார்புத்தன்மை அதிகரிக்கும் நமது அரசியல் சுதந்திரம் பாதிக்கப்படுமளவிற்கு இச்சார்பு நிலை கொண்டு செல்லக் கூடும்.

### அமெரிக்காவை தாஜா பண்ணுவது

இத்தகையநிகழ்ச்சி நடப்பதற்கான முக்கியமான அறிகுறிகள் ஏற்கனவே காணப்படுகின்றன. இந்திய—பாகிஸ்தான் போரின் போதும், அதனை அடுத்த காலத்திலும் அமெரிக்காவுக்கு எதிராக இடிமுழக்கம் செய்யப்பட்டதை ஒருவர் ஞாபகப்படுத்திக் கொண்டால் போதுமானது; பிரதம மந்திரி முதற்கொண்டு ஒவ்வொரு காங்கிரஸ் தலைவரும் சி ஐ ஏ யின் சதிகள் பற்றி கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தனர்.

ஆனால், இதையடுத்து உடனடியாக அமெரிக்காவை தாஜா செய்யும் முயற்சிகள் தொடங்கிவிட்டன. இதற்கிடையே ஓர் ஆசிய நாட்டில், அதாவது வியட்நாமில் அணுகுண்டு போடுமளவுக்கு அருகே வந்துவிட்டதற்காக பிரதம மந்திரி அமெரிக்காவைக் கண்டனம் செய்தார்.

அமெரிக்க அரசாங்கம் கடுமையாக எதிர் நடவடிக்கை எடுத்தது. தனது தூதுவர் இந்தியாவிற்குப் புறப்படும் நாளை காலவரம்பின்றி ஒத்தி வைத்தது. இந்திரா காந்தியை பயம் பிடித்துக் கொண்டது: இதுவரை பேசி வந்ததற்கெல்லாம் மாற்று காட்மாண்டுவில் அவர் பேசிய பேச்சில் வெளிப்பட்டது. அமெரிக்காவை தாம் குறிப்பிடவில்லை என்று அப்பேச்சில் அவர் கூறினார்! பிறகு அமெரிக்கா வருத்தம் தெரிவித்து தூதுவரை அனுப்பி வைத்தது.

பாகிஸ்தானுக்கு ஆயுதங்கள் சப்ளை செய்வதற்கு விதித்திருந்த தடையை நீக்க அமெரிக்கா முடிவு செய்திருக்கிறது என்பது மார்ச் இரண்டாம் வாரத்தில் இந்தியாவிற்கு தெரியவந்தபோது இந்திய அரசாங்கம் தனது வருத்தத்தை அமெரிக்காவிற்கு தெரியப்படுத்தியது, ஆனால், அடுத்தநாள் இந்தியாவின் வேண்டுகோள்களை அமெரிக்கா உதாசீனம் செய்து, பாகிஸ்தானுக்கு ஆயுத சப்ளை செய்வதை மீண்டும் ஆரம்பிப்பதை வெளிப்படையாக அறிவித்தபோது, இந்திய அரசாங்கம் பார்லிமெண்டில் அமெரிக்க நடவடிக்கைக்காக வருத்தம் தெரிவிக்க வேண்டியதேற்பட்டது. இருந்தபோதிலும், இந்தியாவிற்கு அளிக்கப்படும் உதவிக்கு இடப்பட்டிருந்த தடையை அதே நேரத்தில் அகற்றியது, ஏற்கனவே உதவியளித்திருந்த 6.9 கோடி டாலர் உதவியை அளிக்க முன் வந்தது.

இச்சூழ்நிலையில், எந்த ஒரு சுய கௌரவமுள்ள அரசாங்கமும் இந்த உதவியை வெறுத்து உதவி வாங்க மறுத்திருக்கும்; ஆனால் 'பெருமையுள்ள' 'வளைந்து கொடுக்காத' இந்திராகாந்தியால் தலைமை தாங்கப்படும் இந்திய அரசாங்கம் அவ்வாறு செய்யாது, அது நன்றியுணர்வுடன் உதவியை ஏற்றுக்கொண்டது!

முதலாளித்துவ வளர்ச்சிப் பாதையைப் பின்பற்றி, அவ்வாறு பின்பற்றுவதைத் தொடர்ந்து நடத்தியதன் மூலம் இத்தகைய பொருளாதார நெருக்கடி நிர்ப்பந்தங்களுக்குள் நாட்டை, அரசாங்கம் மூழ்கடித்துள்ளது.

நமக்கு முன்னால் உள்ள உடனடியான எதிர்காலமானது இவ்வாறு மிகப்பெரும் ஆபத்துள்ளதாக இருக்கிறது,"

—எர்ணாகுளம் சி. ஐ. டி. யூ. மாநாட்டில் தோழர் பி. ராமமூர்த்தி சமர்ப்பித்த அறிக்கை.

## திண்டுக்கல் நாடாளுமன்ற வாக்காளர் சிந்தனைக்கு...

### வறுமையை வெளியேற்றும் காங்கிரசின் "குளு குளு" அமைச்சர்கள்

மத்தியப்பிரதேசத்தை ஆளுவது இந்திரா காங்கிரஸ் கட்சி, இந்த மாநிலம் இந்தியாவின் நிலப்பகுதியில் 14 5 சதவிதம் உள்ளடக்கியது.

— இங்கு கிட்டத்தட்ட, 17,000 கிராமங்களுக்கு குடிதண்ணீர் கிடையாது

— 35,653 கிராமங்களுக்கு ஆரம்பக் கல்விவசதி கூடக் கிடையாது.

— 70,573 கிராமங்களில் மின்சாரம் கிடையாது" (தேவைக்குமேல் அதிகமாக மின் உற்பத்தி செய்யும் மாநிலம் மத்தியப் பிரதேசம் என்பதுகுறிப்பிடத்தக்கது)

— கல்வியறிவு உள்ளவர்கள், 22.12 சதம்தான் அதிலும் பஸ்தார் மலைங்குடிபகுதியில் 8.64 சதம் தான்.

இந்த மாநிலத்தினை ஆளும் இந்திரா காங்கிரஸ் அமைச்சர்கள் எப்படி வாழ்கிறார்கள் தெரியுமா? வீடுகளை மராமத்து செய்யமட்டும் சென்ற மாதங்களில் பத்துலட்சம் ரூபாய் செலவு,

| | | | |
|---|---|---|---|
| பி. சி. சேத்தி | - - | முதல்வர் | ரூ. 2,58 165 00 |
| கே. எஸ். சுக்லா | — | ரெவின்யூ அமைச்சர் | 45,955.00 |
| எஸ் எஸ். முஸ்ரஸ் | — | நிதியமைச்சர் | 40,392.38 |
| சதுர்வேதி | — | பஞ்சாயத்து | 40275.85 |
| உம்ராவ் | — | கூட்டுறவு | 36,906.77 |
| அர்ஜுன்சிங் | — | கல்வி | 36,743.97 |
| படேல் | — | தொழில் | 35,584.47 |
| திவாரி | — | காடு | 36,035.55 |
| சிங் | — | சட்டம் | 33,192.29 |
| சபாநாயகர் | — | | 11,176.69 |

மந்திரிகளுக்கு. வீட்டுவசதி, மேஜை—நாற்காலி ஊழியர் சம்பளம், டெலிபோன் எல்லாம் இலவசம்.

ஒவ்வொரு அமைச்சருக்கும், வீட்டில் இரண்டு குளு குளு அறைகள். அதாவது ஒன்றுவரவேற்பு அறை! மற்றொன்று படுக்கை அறை!!

இது தவிர. அலுவலகத்தில் ஒரு குளு குளு அறை வேறு!!!

இவர்கள் எல்லோருமாகச்சேர்ந்து, முழங்கும் கோஷம் என்ன?

"கரீபி ஹட்டோ"—

"வறுமையே வெளியேறு"

திண்டுக்கல் தொகுதி வாக்காளர்களே!

இதே இந்திரா காங்கிரஸ் அமைச்சர்களின் வழித்தோன்றல்கள்தான் இங்கும் வருகிறார்கள்!

உங்களைத் தேடி!

வாக்குகள்கோரி ;!

உஷார்! உஷார்!! உஷார்!!!

## இரயில்வே மேம்பாலத்துக்கு நேதாஜி பெயர்

மாயூரம், ஏப். 23—

மாயூரத்தில் கட்டப்பட்டு வரும் இரயில்வே மேம்பாலத்துக்கு நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் பெயரை வைப்பது என்று மாயூரம் நகராட்சிக் கூட்டத்தில் முடிவு செய்திருப்பதாக நகராட்சிமன்ற உறுப்பினர் திரு ராஜாபாதர் அறிவித்துள்ளார் இந்த மேம்பாலம் 45 லட்சம் ரூபாய் செலவில் கட்டப்படுகிறது.

## துப்பாக்கிச் சூட்டை எதிர்த்து பந்த்

பம்பாய் ஏப். 23—

மகாராஷ்டிரத்தில் உள்ள சின்னர் என்னும் நகரில் போலீஸ் சுட்டதின் விளைவாக 5 பேர் இறந்து போயினர். இந்தப் போலீஸ் துப்பாக்கிச் சூட்டை எதிர்த்து நாசிக் நகரில் ஏப். 23-ந் தேதி பந்த் நடைபெற்றது.

### ஆர்ப்பாட்டம்

சின்னர் நகரம் நாசிக் ஜில்லாவில் உள்ளது. பற்றாக் குறைபான அளவில் உணவுப்பொருட்கள் விநியோகிப்பதை எதிர்த்து சின்னர் நகரில் 8000-க்கும் அதிகமான மக்கள் தாசில்தார் ஆபீஸ் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள். போதுமான உணவுக்தானியங்கள் விநியோகம் செய்யுமாறு கோஷமிட்டனர்.

### கேட்டது உணவுப்பொருள் கொடுத்தது குண்டு

இந்த நியாயமான கோரிக்கைக்காக ஆர்ப்பாட்டம் செய்த மக்களை போலீசார் கலைக்க முற்பட்டதில் 5 பேர் சுட்டுப் பட்டு மாண்டனர் 19 பேர் படுகாயமடைந்தனர்.

இதை கண்டித்த, நாசிக் நகரில் ஏப் 23-ல் ஒரு நாள் பந்த் கடைப்பிடிக்கப்பட்டது.

## மார்க்சிஸ்ட் இளைஞர் பேரவை

ஆலத்தம்பாடி, ஏப். 24—

மார்க்சிஸ்ட் இளைஞர் பேரவைக்கூட்டம் இங்கு ஏப், 9-ந் தேதி நடைபெற்றது. 120 தோழர்கள் பங்கு பெற்றார்கள், மார்க்சிஸ்ட் இளைஞர் முன்னணி படையின்கடமைகள் குறித்து எம். பி காளியப்பன், வி ராமதாஸ், ஆர்.கோவிந்தசாமி, என். மணியன் மற்றும் பலர் பேசினார்கள்.

## கொள்முதல் அளவில் வீழ்ச்சி

புதுடில்லி, ஏப் 23—

1972—73-ம் ஆண்டுக்கான நெல் கொள்முதல் குறியிட்ட அளவை விட மிகக் குறைந்த அளவில் நடைபெற்றுள்ளது.

### குறி வேறு நடந்தது வேறு

இந்த ஆண்டு ஏப்ரலுக்குள் 40 லட்சம் டன் நெல் கொள்முதல் செய்ய வேண்டும் என்பது குறியாகும். ஆனால், 20 61 லட்சம் டன் நெல்தான் கொள்முதல் செய்யப்பட்டது. இதை மத்திய விவசாய அமைச்சர் சிண்டே லோக் சபாவில் தெரிவித்தார்.

### அமைச்சர் கூறும் காரணங்கள்

குறைந்த அளவு கொள்முதலுக்குக் காரணம் சில மாநிலங்களில் விளைச்சலில் வீழ்ச்சியாம். மேலும் சர்க்காரின் கொளமுதல் விலையைவிட வெளி மார்க்கெட் விலை அதிகமாக இருக்கிறதாம்.

## 1 கோடியே 79 லட்சம் நாள் இழப்பு

புதுடெல்லி ஏப், 24—

தொழிற்சாலைகளில் 1972ல் பல்வேறு காரணங்களினால் வேலை நடக்காமல் போன நாட்கள் 1 கோடியே 79 லட்சம் என்று அரசு அறிவிக்கிறது

இந்த எண்ணிக்கை இதற்கு முந்திய ஆண்டில் 1 கோடியே 65 லட்சமாக இருந்தது. ஆட்சியாளர்களின் கொள்கைகளால் அதிகரித்து வரும் நெருக்கடியின் எதிரொலி இது.

## 103 நாட்களாக தொடர் உண்ணாவிரதம்

சென்னை, ஏப். 23—

சென்னை பேசின் பிரிட்ஜ் பகுதியில் உள்ள ஜெகப்தி அண்ட் எத்திராஜ கமபெனி தொழிலாளர்கள் கடந்த 103 நாட்களாக தொடர் உண்ணாவிரதம் இருந்து வருகிறார்கள்.

### கோரிக்கைகள்

காண்ட்ராக்ட் முறையை ரத்துச் செய்தல், வேலையைப் பறிக்கும் இயந்திரம் புகுத்தப்படுவது நிறுத்தப்படுதல், கூலி உயர்வு, 20% போனஸ், 8மணி நேரவேலை, வேலை நிரந்தரம், அரசாங்க விடுமுறைகள், தொழிற் சங்க உரிமை, சங்க அங்கீகாரம் முதலிய கோரிக்கைகளை முன்னிருத்தி இத்தொழிலாளர்கள் தொடர் உண்ணாவிரதம் மேற்கொண்டுள்ளனா.

போராட்டம் குறித்து பரிசீலனை செய்ய ஏப். 14-ந் தேதியன்று சங்க செயற்குழுக்கூட்டம் நடந்தது. அதில், ஏப், 30-க்குள் கோரிக்கைகள் ஏற்கப்படாவிடில் போராட்டத்தைத் தீவிரப்படுத்துவது என்றும், நேரடி நடவடிக்கையில் இறங்குவது என்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

# தங்கள் கொள்ளையை நீடிக்க தொழிலாளர்கள் மீது தாக்குதல்

தோழர்களே,

அரசாங்கத்தின் தாக்குதல் ஏற்கனவே தொடங்கிவிட்டது. தொழிலாளர்களுடன் ஊதிய உயர்விற்கோ அல்லது மிகச் சாதாரணமான நலன்களுக்கோ ஆன, எந்தவித ஒப்பந்தங்களிலும் பொதுத் துறைத் தொழில்களிலுள்ள பொது மேனேஜர்கள் நிதியமைச்சகத்தைக் கலந்து அதன் ஒப்புதலைப் பெறுமல் ஈடுபடக்கூடாது என்று 1972-ல் நிதியமைச்சகம் தெரியப்படுத்தியிருக்கிறது.

கடந்த நவம்பர் மாதத்தில், அகில இந்திய சிமெண்டு தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் நடைபெற்றுக் கொண்டிருந்த போது, நடைபெற்ற பேச்சு வார்த்தைகளின் போது ஓர் இடைக்கால உயர்வுக்கு ஒப்பந்தம் செய்யப்பட்டது 1973 பிப்ரவரிக்குப் பிறகு அதாவது முன்புள்ள ஒப்பந்தம் முடிவடையும்போது, சிமெண்டு தொழிலில் உள்ள தொழிலாளர்களின் குறைந்தபட்ச ஊதியமானது உருக்குத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களின் குறைந்தபட்ச ஊதியமாகிய ரூ 245 அளவில் நிர்ணயிக்கப்படுமென்று ஒப்பந்தம் செய்ய வேண்டும் என்று தொழிலாளர்களது பிரதிநிதிகள் வலியுறுத்தினர். பிற சம்பள விகிதங்களை பேச்சுவார்த்தைகளுக்குப் பிறகு நிர்ணயம் செய்து கொள்ளலாம். இதற்கான பேச்சுக்கள் நடைபெற்ற போது ரூ. 230 வரைக்கும் நிர்வாகம் வந்தது ஆனல் இந்தக்கட்டத்தில் தொழில் மந்திரியும், பிரதம மந்திரியும் தலையிட்டு பேச்சு வார்த்தைகளை முறிவடையச் செய்துவிட்டனர்.

## அரசின் கொள்கை

அரசாங்கம் ஒரு தேசிய ஊதியக்கொள்கையை அறிவித்த பிறகுதான் ஊதியப் பிரச்சினை விவாதிக்கப்பட வேண்டுமென்று தொழிலமைச்சரும், பிரதமமந்திரியும் அறிவித்தனர். ஆண்டின் முடிவிற்குள் அந்த ஊதியக்கொள்கை அறிவிக்கப்படுமென்றும் கூறினர். இந்திரா காங்கிரசின் அரவணைப்பிலுள்ள ஐ என். டி. யூ, சி. பிரதிநிதிகள் இதை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. வேலைநிறுத்தம் உள்ளிருந்தே முறியடிக்கப்பட்டது. 1973 பிப்ரவரி மாதமும் கடந்து சென்றுவிட்டது. சடந்த மூன்று ஆண்டு ஒப்பந்தமும் முடிவடைந்துவிட்டது. இருந்தபோதிலும். தேசிய ஊதியக்கொள்கை இதுவரை அறிவிக்கப்படவில்லையாதலால் பேச்சு வார்த்தைகள இன்னும் ஆரம்பிக்கப்படவில்லை இந்த ஊதியக்கொள்கை என்ன என்பதை நாம் அணுகுமுறை தஸ்தாவேஜிலிருந்து அறிந்து கொண்டிருக்கிறோம்.

தொழிலாளர்களின் ஒன்றுபட்ட வலிமைக்கெதிராக தலைவணங்க வேண்டியதேற்பட்டபோது அரசாங்கம் போனஸ் சட்டத்தை திருத்தவேண்டியது எற்பட்டது அதன் மூலம் குறைந்தபட்ச போனசை $8\frac{1}{3}$ சதவீதமாக உயர்த்தியது ஆனல் அதே நேரத்தில் இச் சட்டத்தை மேலும் திருத்தி, கடந்த ஆண்டு பெற்ற போனசை விட இந்த ஆண்டு அதிக போனசை பணமாகக் கொடுப்பதை தடை செய்தது சட்டத்தின் கீழ் அதிக அளவு போனஸ் கொடுக்க வேண்டியதிருந்தாலும்கூட அதைப் பணமாகக் கொடுக்காமல் பிராவிடெண்ட் நிதியில் சேமிப்பு நிதியாகப்போட நிர்ப்பந்தித்தது, தொழிலாளர்களின் பலகோடி ரூபாய் பிராவிடண்ட் நிதியானது முதலாளிகளால் அபகரிக்கப்பட்டு வருவதை—அவ்வாறு அபகரித்தவர்கள் சுதந்திரமாக வலம்வருவதை அனுபவத்தில் கண்டிருக்கும்போது போனஸிலிருந்து பிராவிடெண்ட் நிதிக் கணக்கிற்கு செலுத்தப்படும் தொகையின் விதி என்ன ஆகும் என்பது யாருக்கும் தெரியாது.

ஊதிய முடக்கத்திற்கான பிரச்சாரத்தை பிரதம மந்திரி ஏற்கனவே தொடங்கி விட்டார். உண்மையில் இப்பிரச்சாரத்தை அவர் 1971 மே மாதத்திலேயே ஆரம்பித்துவிட்டார். ஆனல் இன்று அதை அவர் மேலும் அதிகமாக அழுத்தத்தோடு செய்து வருகிறர். சாண்டிபான்ஸ் (மேற்கு வங்கம்) எனும் இடத்திலிருக்கும் காம்கேனு கிராமத்திலுள்ள விவசாயத் தொழிலாளர்கள் கூட்டமொன்றில் பேசும்போது, ஊதிய உயர்வு கோருகின்ற தொழிற்சாலை தொழிலாளர்களும், ஊழியர்களும் தேசத் துரோகிகள் என்று பிரகடனம் செய்யுமளவிற்கு பிரதம மந்திரி சென்றுள்ளார். லாபமடித்து வரிகளை ஏய்த்து, விலைவாசிகளை உயர்த்துகின்ற ஏக போகவாதிகள்—தேச பக்தர்கள்! ஏனென்றல், இவர்கள் தங்கள் கறுப்பு பணத்திலிருந்து கணிசமான அளவு காங்கிரஸ் கட்சிக்குத் தருகிறர்கள்.

## போராடும் சங்கங்கள் மீது கொடுவாள்

தொழிலாளர்களின் எதிர்ப்பிற்கிடையே இக்கொள்கையை நிறைவேற்ற முடியாது என்பது அரசாங்கத்திற்குத் தெரியும். எனவே, தீவிரமான சங்கங்களை தொழில் உறவுத் துறையிலிருந்து அகற்றியாக வேண்டும். இந்த நோக்கத்தை வைத்துக் கொண்டு இக்கொள்கைகளை உள்ளடக்கியுள்ள தஸ்தாவேஜு ஒன்றை ஒரு புதிய தொழில் உறவு மசோதாவிற்காக தொழிலாளர் அமைச்சர் தயாரித்துள்ளார். இந்த தஸ்தாவேஜை எல்லா மாநில அரசாங்கங்களுக்கும் அனுப்பி வைத்துள்ளார்.

அதிகார பூர்வமான அமைப்பு ஒன்றின் மூலம் அங்கத்தினர் பட்டியலைச் சரிபார்ப்பதன் அடிப்படையில், பேச்சு வார்த்தை நடத்த உரிமை பெற்ற சங்கமாக ஒரே ஒரு சங்கத்தை மட்டும் அங்கீகரிப்பதற்கு அந்த தஸ்தாவேஜு வழி செய்கிறது இந்த நடைமுறையின் கீழ், தொழிலாளர்களின் ஆதரவைப்பெற்றிராத, ஆனல் ஆளும் வர்க்கங்களின் சொற்படி நடக்கக்கூடிய சங்கங்கள் அங்கீகாரம் பெற்றவையாக அறிவிக்கப்படும் என்பதை அனுபவம் காட்டுகிறது:

அங்கீகாரம் பெற்ற சங்கம் மட்டுமே, தகராறை எழுப்பவும், வேலை நிறுத்தத்தை அறிவிக்கவும் முடியும்,

அங்கீகரிக்கப்படாத சங்கம் ஒன்று வேலை நிறுத்தத்திற்கு ஏற்பாடு செய்தால் அந்த வேலை நிறுத்தம் சட்டவிரோதமாகும். அச்சங்கத்தின் நிர்வாகிகள் மூன்றுண்டுகள் சிறை வைக்கப்படலாம். இத்தகைய வேலை நிறுத்தத்தில் பங்கெடுக்கும் தொழிலாளர்கள் ஓராண்டுவரை சிறை வைக்கப்படலாம்.

மத்திய அரசிலும், மாநிலங்களிலும், தொழில் உறவு கமிஷன்கள் அமைக்கப்படுவதற்கும் இந்த தஸ்தாவேஜு வழி செய்கிறது.

முதலாளி, அல்லது அங்கீகரிக்கப்பட்ட சங்கம் அல்லது சம்பந்தப்பட்ட அரசாங்கம் ஆகியவற்றிலொருவர் எவ்வித தகராறையும் நேரடியாக இந்த கமிஷனுக்குத் தெரியப்படுத்தலாம் அவ்வாறு தெரியப்படுத்தப்பட்ட பிறகு, வேலை நிறுத்தம் செய்வது சட்டவிரோதமானதாகும். கமிஷன் அளிக்கும் தீர்ப்பு இரு சாராரையும் கட்டுப்படுத்தும்.

பல தொழில்களின் பட்டியல் தயாரிக்கப்பட்டு இவை அத்தியாவசியத் தொழில்களாகப் பிரகடனம் செய்யப்பட்டுள்ளன. இத்தொழில்களில் வேலை நிறுத்தமானது முழுமையாக தடை செய்யப்பட்டிருக்கின்றது. எல்லாத் தகராறுகளையும் மத்தியஸ்தத்தின் மூலமாக மட்டும்தான் தீர்த்துக்கொள்ள வேண்டும்.

முறையற்ற தொழிலாளர் நடவடிக்கைகள் பற்றிய விரிவான பட்டியல் ஒன்று தரப்பட்டிருக்கிறது. இவற்றில் ஈடுபடுவது இரண்டாண்டுகளுக்கு அங்கீகாரத்தை இழக்கச் செய்யும்.

இவ்வாருக தீவிரமான சங்கங்களின் வளர்ச்சியை, தடுத்து நிறுத்தவும், தங்களது கையாள் சங்கங்களையே பேச்சு வார்த்தை நடத்தும் ஏஜெண்டுகளாக நியமிக்கவும், அந்தச் சங்கம்கூட, தகராறு எதையும் எழுப்புமானல், கட்டாய மத்தியஸ்தத்தைத் திணிப்பதற்கும் அரசாங்கம் முயன்று வருகிறது,

இது அரசாங்கத்தின் நீசத்தனமான விளையாட்டாகும். தொழிலாளி வர்க்கத்தை பயமுறுத்திப் பணிய வைக்கவில்லை என்றல். மக்களின் பிற்பகுதினரும் போராட்டங்களில் ஈடுபட்டு எழுவதை—5-வது திட்டத்தில் திட்டமிடப்பட்டுள்ள தாக்குதல்களுக்கு எதிராக போராட்டங்களில் அவர்கள் ஈடுபடுவதைத் தடுக்க முடியாது என்பதும், தங்களது மக்கள் விரோதக் கொள்கைகளையும், திட்டங்களையும் சுலபமாகச் செயல்படுத்த முடியாது என்பதும் அரசாங்கத்திற்குத் தெரியும்

## சவாலை ஏற்க வாரீர்

தொழிலாளி வர்க்கம் முழுவதற்கும், மக்களுக்கும் விடப்பட்டிருக்கும் சவாலாகும் இது.

தொழிலாளி வர்க்கத்தின் உறுதியான ஒற்றுமையால் மட்டும்தான் இச்சவாலை ஏற்று, நீசத்தனமான திட்டங்களை முறியடிக்க முடியும். உழைக்கும் மக்கள் அனைவரையும் தொழிலாளி வர்க்கம் திரட்ட வேண்டும். தொழிலாளர்களது ஒற்றுமையையும். இந்த அபாயத்தை எதிர்ப்பதற்காக சகல தொழிற்சங்கங்களின் ஐக்கிய முன்னணியையும் உருவாக்குவது இன்றைய மிக அவசரமான தேவையாகும்.

—சி. ஐ. டி. யு. மாநாட்டில் பி. ராமமூர்த்தி

# மத்திய, மாநில அரசுகளின் சதியே மே. வங்க படுகொலைகள்

## இந்தியா முழுவதும் எதிர்ப்பு தெரிவிக்க சி. ஐ. டி. யூ. அறைகூவல்

அழிக்கோடன்நகர்,
ஏப். 21—
மேற்கு வங்க அடக்குமுறையைக் கண்டித்தும் முறியடிக்க வேண்டிய அவசியம் குறித்தும்,மேற்கு வங்கத் தொழிலாளர் தலைவர் தோழர் கிருஷ்ணகோஷ் ஓர் தீர்மானத்தைப் பிரேரேபித்தார். அதுபற்றி அவர் பேசுகையில்:—

"மேற்குவங்கத்தில் இதுவரை நமது இயக்கத்தைச் சேர்ந்த 778 பேர்களைப் படுகொலைசெய்திருக்கிருர்கள். ஆயிரக்கணக்கானவர்களை சிறையில் தள்ளியிருக்கிருர்கள் தெருக்களிலே நமது தோழர்கள் நடமாட முடியாது. ஊரில் வசிக்கவும் முடியாது.

பாக்டரிகளில் தொழிற் சங்க வேலைகள் செய்ய முடியாது. சி. ஐ. டி. யூ சங்கத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லிக் கொள்ளவும் முடியாது.

போலீஸ்துணை கொண்டு குத்தகை விவசாயிகளை நிலத்தை விட்டு வெளியேற்றுகிருர்கள். அவர்கள்சொந்தமாக வைத்து உழுதுபயிரிடுகின்ற அரசு புறம்போக்கு நிலங்களையும், பிடுங்கிக் கொள்கிருர்கள்.

### சேர்ந்து எதிர்ப்போம்

இவ்வளவுகொடுமையின் மத்தியிலும்கூட, மக்களின் சகலபகுதி மக்களையும். ஒன்று திரட்டி, இந்த மிலேச்ச அடக்குமுறையை எதிர்த்து வருகிறோம்,

என்றுலும், இந்த அரை பாசிஸ அடக்கு முறையை மேற்குவங்கத் தொழிலாளர்களால் மட்டும் முறியடித்துவிட முடியாது. இந்தியா முழுவதுமுள்ள ஜனநாயக சக்திகள் கிளர்ந்தெழ வேண்டும்.

ஏனென்றல், நிலைமை இன்னும் பயங்கரமாகத்தான் இருக்கிறது. சென்ற மாதம்கூட ஹௌராஜில்லாவில் ஒருநிலப்பிரபு போலீஸ் துணையுடன், ஒரு விவசாயச் சங்கத் தலைவரின் வீட்டுக்குப்போய், அவரை ரிவால்வாரால் சுட்டுக் கொன்றுவிட்டுப் போயிருக்கிருன்.

பட்டப்பகலில், போலீஸ் கண்முன்னே, போலீஸ் துணையுடன் நடக்கும் இத்தகைய பயங்கர படுகொலைகளை எதிர்த்து முறியடிக்க சி ஐ டி யூ தொழிலாளர்கள் தமது கோரிக்கைகளுடன் நிற்காமல், விவசாயிகளுடைய கோரிக்கைகளையும், இதர நடுத்தரவர்க்க ஊழியர்களின் கோரிக்கைகளையும் எடுத்துக்கொண்டு பிரம்மாண்டமான ஒற்றுமையைக் காட்டிப்போராடி வருகிருர்கள்.

### அரசாங்கத் தாக்குதல்

மேற்குவங்கப் படுகொலைகளையும் அடக்கு முறையையும் தனிப்பட்ட நிகழ்ச்சிகளாகப் பார்க்காதீர்கள். மத்திய அரசும்மாநிலஅரசும் சேர்ந்து தீட்டிய கூட்டுத் திட்டத்தின் அடிப்படையில்தான், இவையெல்லாம் நடக்கின்றன.

அதனுல்தான் இந்தக் கொடுமைகளை எதிர்ப்பதையே பிரதானபிரச்சினையாக எடுத்துக்கொண்டு நாடு முழுவதும் கிளர்ச்சி செய்ய வேண்டிய கடமையை சி ஐ டி யூ எடுத்துக்கொள்ள வேண்டும்'. என்று கூறினர்,

இத்தீர்மானத்தை ஆதரித்து தோழர் ஆர். உமாநாத் பேசுகையில் "அரசாங்கமும் ஆளும் வர்க்கங்களும் தொடுத்துள்ள இத் தாக்குதல்களை, எல்லா மக்களையும் ஒன்று திரட்டி முறியடிப்போம என்று கூறினர்

பலத்த கராவாலியுடன் தீர்மானம் நிறைவேறியது.

## சஸ்பெண்டை எதிர்த்து உண்ணுவிரதம்

கோயமுத்தூர், ஏப். 24—
கோபியில் உள்ள திரு அண்ட் வரதலக்ஷுமிடெக்ஸ் டைல்ஸ்நிர்வாகம் 25தொழிலாளர்களுக்கு காலவரம்பின்றி ஏப். 13-ல் சஸ்பெண்டு நோட்டீஸ் கொடுத்துள்ளது.

இதை எதிர்த்து ஏப் 18-ல் தொழிலாளர்கள் ஊர்வலமாக கோபி தாசில்தாரை பேட்டி கண்டு தொழிலாளர்களுக்கு நீதி கிடைக்க நடவடிக்கை எடுக்க கோரி மகஜர் கொடுக்கப்பட்டது

21-ந் தேதி பேக்டரி முன்பு தோழர் ஆர் சின்னப்பன் தலைமையில் உண்ணுவிரதம் நடைபெற்றது. தோழர் வேலுச்சாமி துவக்கிவைத்தார். தோழர் பி ஆர் நடராஜன் முடித்து வைத்தார்,23-ந்தேதி தாசில்தார ஆபீஸ் முன்பு சங்கச்செயலாளர் தோழர் எஸ் எம் பரன் தலைமையில் 24 தொழிலாளர்கள் உண்ணுவிரதம் மேற்கொண்டார்கள். தோழர் வி. ஆர். மாணிக்கம் உண்ணுவிரதத்தை துவக்கி வைத்தார்.

ஏப். 24-ல் பேக்டரி மானேஜர் வீட்டு முன்பு தோழர் எ. கண்ணப்பன் தலைமையில் தொழிலாளர்கள் உண்ணுவிரதம் மேற்கொண்டுள்ளார்கள்.

# மன்னர்குடியில் ஜனநாயக மாதர் சங்க முதல் ஆண்டு மாநாடு

## 1500 பெண்கள் ஊர்வலம்

மன்னர்குடி ஏப் 21—
ஜனநாயக மாதர் சங்கத்தில மன்னை தாலுகா முதல் ஆண்டு மாநாடு மன்னை நாகம்மையார் இல்லத்தில் அமைக்கப்பட்டிருக்கும் வெண்மணி தியாகிகள் அரங்கில் 21—4—73-ந் தேதி நடைபெற்றது. மாநாடு காலை 11-30 மணிக்கு துவங்கியது. மாநாட்டுத் தலைவராக மன்னைத் தாலுகா மாதர் சங்க தலைவர் தோழியர் ராஜம் வெங்கடேசன அவர்கள் ஏக மனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தமிழ்நாடு மாதர் சங்கத் தலைவா தோழியர் பாப்பா உமாநாத் அவர்கள் செங்கொடி ஏற்றிவைத்தார்கள். வீரதியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது அடுத்து நாகைதாலுகா மாதர்சங்கத் தலைவர் தோழியர் கா. பஞ்சவர்ணம் அவர்கள் மாநாட்டைதிறந்துவைத்து சிறப்பு உரை ஆற்றினர்'

அடுத்து மன்னை தாலுகா மாதர் சங்கச் செயலர் தோழியர் உ தேனம்மாள் அவர்கள் செயலர் வேலை அறிக்கையை வாசித்து அளித்து விளக்கஉரை தந்தார்.

பிறகு அறிக்கை மீது விவாதம் நடைபெற்றது. விவாதத்தில் தோழியர் பங்கஜம், பி பார்வதி, கே. பிச்சைமணி ஆகியோர் பங்குகொண்டு விவாதித்தார்கள்.

அடுத்த நிகழ்ச்சியாக கீழ்க்கண்ட புதிய தாலுகா தலைமைக்குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. ராஜம் வெங்கடேசன் தலைவர், தேனம்மாள் செயலர், பி அன்னபட்டு உப தலைவர்: கே பிச்சைமணி,பொருளர்' பி பார்வதி, எஸ் சரோஜா, கே ஆண்டாள், ஆர் நட்சத்திரம், எம் விசாலாட்சி, எஸ் வீரம்மாள், முல்லையம்மாள், பி பேபிசுலோசன, கே பட்டம்மாள் ஆகியோர் நிர்வாகக் குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கடைசியாக கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.

### தீர்மானங்கள்

விவசாயத் தொழிலாளிகளுக்கு ஆண், பெண் வேறுபாடின்றி சமகூலி அளிக்கப்படவேண்டும்.

விவசாய வேலைகளில் எந்திரம் புகுத்தப்படுவதை நிறுத்த வேண்டும்.

விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம், புதிய வரிவுபர்வு இவைகளை எதிர்த்து போராடுவது.

பஞ்சாயத்துக்கள் தோறும் பாலர் பராமரிப்பு நிலையங்களை ஏற்படுத்தி குழந்தைகளை பராமரிக்க அரசு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்

பிரசவ காலத்தில் அரசாங்கம் உதவித்தொகை வழங்க வேண்டும்.

தமிழ்நாடு பூராவும் ஒரே அளவான கூலிச் சட்டத்தை கொண்டுவர அரசு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்.

மத்திய மாநில அரசு வேலைகளில் பெண்களுக்கு சம எண்ணிக்கை வேண்டும்.

மாதர் சங்கம் இல்லாத கிராமங்களில் மாதர் சங்க கிராமக் கமிட்டிகளை அமைக்க வேண்டும்.

மாதர் சங்க கமிட்டிகள் மாதம் ஒருமுறை கூட வேண்டும்.

மாதர் சங்க வளர்ச்சிக்கு மாதம் 25 காசுகள் வளர்ச்சி நிதியாக கொடுக்க வேண்டும். அந்த நிதிபேங்கில் போட்டு வைக்கப்படும்.

சொசைட்டி மூலமாகதற்போது மண்ணெண்ணை வழங்கப்படுவது கிராமங்களுக்கு சரிவர வழங்கப்படுவது கிடையாது. எனவே கிராமங்களுக்கு நேரிடையாக வழங்கப்படுவதுடன் வாரத்திறகு $\frac{1}{2}$ லிட்டர் என்பதை குறைந்த பட்சம் 2 லிட்டராக அதிரிக்க அரசு உடனடிநடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்.

அரிசி அரவை மில்களுக்கு தாராளமாக மின்சாரம் வழங்கப்படவேண்டும். அத்துடன் நெல் அறவைக்கு உயர்த்தப்பட்டிருக்கும் கட்டண உயர்வை ரத்து செய்து குறைந்த கட்டணத்தில்நெல்அறைத்துக் கொடுக்க மில் அதிபர்களுக்கு அரசு ஆணை பிறப்பிக்கவேண்டும்.

### மாபெரும் ஊர்வலம்

இதுவரை மன்னை நகரம் கண்டிராத மாபெரும் பெண்கள் ஊர்வலத்தைக் கண்டுகளித்த மன்னை நகர மக்கள் வியந்து பாராட்டியது சிறப்பான அம்சமாகும்.

அடுத்து மாநாட்டை வாழ்த்தி மன்னை தாலுகா மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் ஏ நடராஜன், ஏ. சே. கணேசன் பி. வெங்கடேசன் தமிழ்மாநிலக்குழு உறுப்பினர் தோழர் ஜி. வீரையன் அவர்களும, கடைசியாக தமிழ்நாடு மாதர் சங்க தலைவர் தோழியர் பாப்பா உமாநாத் பேசுகையில் தற்கால அரசியலில் மாதர் சங்கங்கத்தின் அவசியம் குறித்தும். பெண்களுக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடிகளைப்பற்றியும்' ஆண்களுக்கு பெண்களுக்கும் சமநீதி வழங்கக்கோரியும் மாநாட்டில் போடப்பட்ட தீர்மானங்களை விளக்கியும் நீண்டதொரு உரையாற்றினர்கள். மாநாட்டை வாழ்த்தி தஞ்சை காலுகா மாதர் சங்க செயலர் தோழியர் லெட்சுமி அவர்கள் அனுப்பி இருந்த வாழ்த்துச் செய்தி வாசித்து அளிக்கப்பட்டது. கடைசியாக செயலர் நன்றி உரையுடன் பிரதிநிதிகள் மாநாடு புரட்சிகர வாழ்த்துக்களுடன முடிவுற்றது.

அன்று மாலை 4 மணிக்கு மன்னைகீழ்ப்பாலத்திலிருந்து புறப்பட இருந்த ஊர்வலத்திற்கு தாலுகா பூராவிலிலிருநதும் 28 மாட்டு வண்டிகளிலும் டிராக்டார்களிலும் பெண்கள் கீழ்ப்பாலத்தை வந்து அடைந்தார்கள். கீழ் பாலத்திலிருந்து ஊர்வலம மாலை 5-30 மணிக்கு தோழியர் ராஜம் வெங்கடேசன். உ. தேனம்மாள் ஆகியோர் தலைமையில் புறப்பட்டது. சுமார் 1500 பெண்கள கலந்து கொண்ட ஊர்வலத்தை, தாலுகா மாதர் சங்க கமிட்டி உறுப்பினர்களான தோழியர்கள் பி பார்வதி, கே பட்டம்மாள், கே. பிச்சைமணி , பி பேபி சுலோசன, பி அன்னபட்டு, எம் விசாலாட்சி, முல்லையம்மாள், எஸ் சரோஜா போன்றவர்கள் சீர் செய்து நடத்தி சென்றுர்கள் அனைத்து பெண்களும் சிவப்பு சேலை ஜாக்கெட் அணிந்து கொண்டு, தியாகிகள் இரத்தத்தில் தோய்ந்தெடுத்த செம்பதாகையை உயர்த்தி பிடித்துக் கொண்டு மத்திய மாநில அரசு வேலைகளில் பெண்களுக்கு சம வாய்ப்பு வேண்டும், ஆண், பெண் இருவருக்கும சம கூலி கொடுக்க வேண்டும், உழுபவனுக்கு நிலம் வேண்டும, கூலி உயர்வுச் சட்டம் கொண்டுவா, விலைவாசி ஏற்றத்தை ரத்து செய் போன்ற உரிமை முழக்கங்களை வானதிர முழங்கிக் கொண்டு வந்தார்கள்.

ஊர்வலம் முக்கிய வீதிகளின் வழியாக மன்னை வெண்ணெய்த்தாழி மண்டபத்தை வந்து அடைந்தது, பொதுக் கூட்டத்திற்கு மன்னை தாலுகா தலைவர் தோழியர் ராஜம் வெங்கடேசன் தலைமை தாங்கினர். தலைவர் முன்னுரையை அடுத்து தாலுகா செயலர் தோழியர் உ. தேனம்மாள் பேசுகையில் மாநாட்டு தீர்மானங்களை விளக்கினர்.

### விவசாய பெண் தொழிலாளர்களுக்கு பிரசவகால உதவி

அடுத்து நாகை தாலுகா மாதர் சங்க தலைவர் தோழியர் கா. பஞ்சவர்ணம் பேசுகையில் அரசு தரப்பில் கொடுக்கக்கூடிய வேலைகளில் பெண்களுக்கு சம வாய்ப்புக்கள அளிக்கவேண்டும் என்றும், விவசாய தொழிலாளி குடும்ப பெண்களுக்கு பிரசவ காலத்தில் உதவித் தொகை வழங்க அரசு தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று விரிவாக பேசினர். அடுத்து ஏ நடராசன, ஏ கே கணேசன், ஆகியோர் மாநாட்டை வாழ்த்திப் பேசினர்கள். கடைசியாக தமிழ்நாடு மாதர் சங்க தலைவர் தோழியர் பாப்பா உமாநாத் பேசுகையில் மாநில அரசு கையாண்டு வரும் மக்கள் விரோதக் கொள்கைகளையும், மத்திய அரசின் புதிய வரி விதிப்பு, இந்திரா ஊழல் போன்றவற்றைப் பற்றியும், திண்டுக்கல் தேர்தலில் மார்க்சிஸ்ட் கமயூனிஸ்ட் கட்சியின் நிலைபற்றியும், அதிமுக வலது கட்சியின் சந்தர்ப்பவாத நடைமுறைகளைப் பற்றியும் விரிவாகவும் விளக்கமாகவும் பேசினா.

பொதுக் கூட்டத்தில் சுமார் 3000 பேர்கள்கலந்து கொண்டனா பொதுக் கூட்டத்தை சிறப்பான முறையில் நடத்திக் கொடுத்த அனைத்து தோழியர்களுக்கும், மன்னை நகரவாசிகளுக்கும், தோழர்களுக்கும் தலைவர் முடிவுரையில் நன்றி கூறி கூட்டம் முடிவுற்றது.

# முதலாளித்துவ சமூக அமைப்பில் வேலையின்மை ஒழியாது

## தோழர் பி. டி. ரணதிவே விளக்கவுரை

அழிக்கோடன் நகர்,
ஏப். 21—
முதலாளித்துவ சமூக அமைப்பு இருக்கும் வரை வேலையில்லாத் திண்டாட்டம் இருந்தே தீருமென்பதையும்— தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில் சோஷலிஸ சமூகம் அமைந்தால்தான் வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிந்து, அனைவருக்கும் வேலை கிடைக்குமென்பதையும், நம தொழிலாளர்களிடத்திலும், விவசாயிகளிடத்திலும் மாணவர்களிடத்திலும் விளக்கிக்கூற வேண்டும என்று, வேலையில்லாத் திண்டாட்டம் பற்றிய ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்து தோழர் பி. டி. ரணதிவே பேசினர்.

அவர்களால் இப் பிரச்னையைத் தீர்க்க முடியவில்லை. பெரு முதலாளிகளைக் கட்டிக் காக்கிறவர்களால் எப்படித் தீர்க்க முடியும்? பல வழிகளிலும் நிலங்களையெல்லாம் தமது வசமே குவித்துக்கொள்ள இடமளித்துள்ளவர்களால் எப்படித் தீர்க்க முடியும்?

### திசை திருப்பல்

வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தீர்க்க முடியவில்லையென்பதையும்— அது மேலும் மேலும் தீவிரமாக அதிகரித்துக்கொண்டிருக்கிறது என்பதையும் ஆளும் கட்சியினர் பார்க்கிருர்கள், பார்த்து பயப்படுகிருர்கள்.

இந்தப் பயங்கர நிலைமையை திசை திருப்பிவிட முயற்சிக்கிருர்கள்.

அந்தந்த மாநிலத்தில் பிறந்தவர்களுக்குதான் வேலை என்ற கோஷத்தை எழுப்பி, தொழிலாளர்கள் மத்தியில் சீர்குலைவையும் இனக் கலவரங்களையும் தூண்டிவிடுகிருர்கள்.

### வறுமை மட்டம் எத்தனை சதம்?

இன்றைய நிலைமை என்ன? இந்திய மக்களில் 30 சதவிகிதம் மக்கள் 40 ரூபாய்கூட கிடைக்காமல் வறுமை மட்டத்தில் வாழ்வதாக அரசாங்கத் தரப்பில் கூறுகிருர்கள்.

அனுதாபப்படுவது போன்று, ஒரு பெரும் பொய்ப் பிரச்சாரத்தைச் செய்கிருர்கள்.

உண்மையில் வறுமைப் பட்டுள்ளவர்கள், 70 சதவிகித மக்களாவர்.

புள்ளி விபரத்தைத் தலைகீழாகச் சொல்லி, மக்களை ஏமாற்றுகிருர்கள்.

இம்மாதிரியான ஏமாற்றுப் பிரச்சாரத்தையும், திசை திருப்பல் சீர்குலைவு வேலைகளையும் சி ஐ டி யூ கடுமையாக எதிர்த்துப் போராட வேண்டும என்று தோழர் பி. டி. ரணதிவே கூறினர்.

# மதுரைப் பகுதி காப்பீட்டுக் கழக ஊழியர் சங்க மாநாடு

மதுரை, ஏப். 24—
மதுரைப் பகுதி காப்பீட்டுக் கழகத்தின் 17-வது ஆண்டு விழா ஏப். 26-ந் தேதி (வியாழன்) மாலை 5-30 மணிக்கு செல்லூர் பாலம் ஸ்டேசன் ரோட்டிலுள்ள ஆயுள் காப்பீட்டுக் கழகப் பகுதி அலுவலகத்தில் அமைந்துள்ள திறந்தவெளி அரங்கில நடைபெறும், தொழிற் சங்கத் தலைவர்கள் பலர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுவார்கள்.

இந்த ஆண்டு விழாவை யொட்டி புதன் கிழமை காலை 10 மணிக்கும், வியாழக்கிழமை காலை 10 மணிக்கும் சங்கத்தின் பொதுக்குழுக் கூட்டங்கள் நடைபெறும.

இந்த விழாவுக்கு அனைத்துப் பகுதி மக்களும் வருகை தந்து சிறப்பிக்கும்படி சங்கச் செயலர்ளர் எஸ். தண்டபாணி கேட்டுக் கொண்டுள்ளார்.

## உலகத் தொழிலாளி வர்க்கத்தின்
# ஒண்ணும் நம்பர் எதிரி அமெரிக்கஏகாதிபத்யமே
## எதிர்த்து தொடர்ந்து போராடுவோம்
## எர்ணுகுளம் சி.ஐ.டி.யூ.மாநாட்டின் பிரகடனம்

அழிக்கோடன் (எர்ணுகுளம்) ஏப். 23 |

**உலகத் தொழிலாளி வர்க்கத்தின் ஒண்ணும் நம்பர் எதிரியும், யுத்தத்தின் உறைவிடமுமான அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு எதிராக போராட்டத்தை விடாப்பிடியாகத் தொடர்ந்து மேலும் வலிமையுடன் நடத்தும் என்று சி ஐ டி யூ-வின் 2-வது அகில இந்திய மாநாடு உறுதியளித்தது.**

தொழிலாளி வர்க்க சர்வதேசியத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்திக் கொண்டு சி ஐ டி யூ மாநாடு இந்த உறுதி மொழி அளித்தது.

உலகத் தொழிலாளி வர்க்கத்தின் சர்வதேசிய தினமான மே தினத்தையொட்டி சி ஐ டி யூ வின் 2வது அகில இந்தியமாநாடு நடைபெற்றது முக்கியத்துவம் வாய்ந்ததாகும் என்றும தீர்மானம் குறிப்பிட்டது.

தொழிலாளி வர்க்கத்தின் பொது லட்சியமானவறுமை இல்லாமையும் வேலையில்லாத் திண்டாட்டம் சுரண்டல் இல்லாமையும் கொண்ட—ஒரு சோசலிச சமுதாய அமைப்புக்காக இந்தியத் தொழிலாளி வர்க்கம் பாடுபடும் என்று உலகத் தொழிலாளி வர்க்கத்துக்குமாநாடு உறுதியளித்தது.

பொருளாதார, கலாச்சார துறைகளில் சோவியத நாடும். மக்கள் சீனமும் மற்ற சோசலிச நாடுகளும் அடைந்த வெற்றிகளை மாநாடு பாராட்டியது.

வரும்ஆண்டுகளில்மேலும் பல வெற்றிகளைப் பெற அந்நாடுகளால் இயலும் என்றும் மாநாடு நம்பிக்கை தெரிவித்தது.

இந்த நாடுகளுக்கு உண்டாகும் வெற்றிகள் உலகத் தொழிலாளி வர்க்கத்தின் வெற்றியாகும். ஏகாதிபத்தியம் கட்டவிழ்த்துவிட்டுள்ள அச்சுறுத்தலிலிருந்து இந்த வெற்றிகளை பெரிதும் பாதுகாப்பதற்காக, உலகத் தொழிலாளி வர்க்கத்தோடும மற்ற முற்போக்கு எண்ணம் கொண்டவர்களோடும் கைகோர்த்து நிற்குமென சி ஐ டி யூ மாநாடு கூறியது

யுத்தத்தின் உறைவிடமாகிய ஏகாதிபத்தியத்துக்கு எதிராகவும் உலக சமாதானத்துக்காகவும் தொடர்ந்து வலிமையுடன் போராட்டம் நடத்துமென்று மாநாடு உறுதியளித்தது. ஏகாதிபத்தியத்தை நசுக்க வேண்டும என்பது மட்டுமே, உலக சமாதானத்திற்கான மார்க்கம் என்றும மாநாடு வலியுறுத்தியது.

### கம்போடியா-லாவோஸ் மக்களுக்கு வாழ்த்து

அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் பொம்மை அரசுகளுக்கு எதிராக தீரமான போர் செய்கின்ற லாவோசிலும் கம்போடியாவிலும் உள்ள மக்களுக்கு மாநாடு வெற்றிகரமான நல்வாழ்த்துக்களை தெரிவித்தது.

சி ஐ டி யூ தீர்மானம் தொடர்ந்து சொல்லுது

கம்போடியாவில் அமெரிக்கா ஒரு பொம்மை அரசாங்கத்தை உண்டாக்கிய நாள் தொட்டு கம்போடியா மக்கள் அந்தப் பொம்மை அரசுக்கு எதிராக போராட்டத்தி வருகின்றனர் அடிக்கடி தொடர்ந்து அவர்கள் வெற்றி பெற்று வருகின்றார்கள் கம்போடியாவின் தலைநகரத்தை (நாம் பென்னை) விடுதலைப் படையினர் முழுமையாக முற்றுகையிட்டுள்ளனர் அந்த நகரம் மட்டுமே பொம்மை அரசின் ஆதிக்கத்தில் உள்ளது. லான்—நால் அரசாங்கத்தில் 2 முக்கிய அமைச்சர்கள் ராஜினாமா செய்திருக்கிறார்கள் இந்தச் சமயத்தில்தான் அமெரிக்கா கம்போடியாவில் மிருகத்தனமான குண்டு வீச்சுத் தாக்குதலை ஆரம்பித்தது.

லாவோசில் கூட்டாட்சி—லாவோ வின் விடுதலைப்படையின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த முடியாது போன லாவோஸ் அரசாங்கம் விடுதலைப்படையுடன் போர்நிறுத்தஉடன்பாடுக்கு வந்துள்ளது. இந்தச் சமயத்தில்தான் அதை நாசமாக்கிக் கொண்டு லாவோசில் விடுதலைப் படையின் பிரதேசங்கள் மீது நிக்சன் குண்டு வீச்சுத் தாக்குதல் ஆரம்பித்துள்ளார், லாவோசில் சமாதானம் ஏற்படக்கூடாது என்பதே நிக்சனுடைய ஆசை.

இதைமலைப்பதற்காகவே லாவோசுக்கும்; கம்போடியாவுக்கும் வடவியட்நாம் தன்னுடைய இராணுவத்தை அனுப்புகிறது என்ற வெட்கம் கெட்ட பொய்ப் பிரச்சார வேலைகளில் நிக்சன் ஈடுபட்டுள்ளார்.

வியட்நாமிலிருந்து தோற்றோடிய நிக்சன, இந்தோ—சீனா முழுவதையும் யுத்தத்தில் மூழ்கடிப்பதற்காக முயற்சித்துள்ளார் என்றும் தீர்மானம் சுட்டிக்காட்டியது. அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் புதிய சதியாலோசனைக்கு எதிராகக் குரலெழுப்புவதற்கு இந்தியத் தொழிலாளி வர்க்கத்தையும் முற்போக்காளர்களையும், ஜனநாயக சக்திகளையும் மாநாடு வேண்டிக் கொண்டது.

லாவோசிலும், கம்போடியாவின்மீதும் குண்டு வீச்சுத் தாக்குதல் நடத்துகின்ற அமெரிக்க அரசாங்கத்தை இந்திய அரசு கண்டனம் செய்ய வேண்டுமென்று மாநாடு கோரியது.

தென் கிழக்கு ஆசியாவின் மீதான அமெரிக்காவின் சதிகளுக்கு எதிராக ஒன்றுபட்டு நிற்க வேண்டுமென்றும் விடுதலைப்போர் நடத்துகின்ற கம்போடியாவிலும லாவோசிலும் உள்ள மக்களுக்கு எல்லாவித உதவியையும் கொடுக்க வேண்டுமென்றும் சோவியத் அரசையும், சீன அரசையும், மற்ற சோசலிஸ்ட் அரசுகளையும் சி ஐ டி யூ மாநாடு வேண்டிக் கொண்டது.

---

## ஆளும் கட்சியினரின்...

(2-ஆம் பக்கத் தொடர்ச்சி)

கையெழுத்துப் போட்டு விட்டு தனது இருப்பிடத்திற்கு வந்தபினனுங்கூட ஆளுங் கட்சி உறுப்பினர்கள், மதுலிமாயி வழக்கத்துக்கு மாறான நடவடிக்கை மேற்கொண்டதாக பலத்த குரலில் எதிர்ப்புத் தெரிவித்தனர், ஆனல் மதுலிமாயி தன் இடத்தில் இருந்து கொண்டே நடவடிக்கைகளை கவனித்துக் கொண்டிருந்தார்.

### சபாநாயகருக்கு ஆளும் கட்சியின் மறுப்பு

ஆளுங்கட்சி உறுப்பினர்கள் அவர்களது இருப்பிடத்தைவிட்டு முன் தள்ளிச் சென்று கத்தினார்கள். இதற்கு எதிர்கட்சி உறுப்பினர் பலத்த ஆட்சேபம தெரிவித்தனா.

இவ்வாறு எதிர்க்கட்சி உறுப்பினர்களும் ஆளுங்கட்சி உறுப்பினர்களும் மாறிமாறி பலத்த குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள். சபாநாயகர் குறுக்கிட்டு அமைதியை ஏற்படுத்திவிட்டு "துரதிர்ஷ்டமான சில நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன. பதவிப்பிரமாணத்திற்கு சில நடைமுறைகள் இருக்கின்றன. அவைகளை மதுலிமாயி கடைப்பிடிக்கவில்லை" எனக்கூறி மதுலிமாயியை வரவேற்று கைகுலுக்க சபாநாயகர் தயாராக இருந்தார். இதற்கு ஆளுங்கட்சியினர் ஆட்சேபித்து கூச்சலிட்டார்கள்.

அதற்கு, சபாநாயகர். "மதுலிமாயி தன்னுடைய நண்பர் என்றும், அவரை வரவேற்பதாகவும்," கூறினார்.

---

## தோழர் சங்கரய்யா...

(1-ம் பக்கத்தொடர்ச்சி)

போச்கா? —என்ன சொல்லுது வலதுக்கு?

இந்திராகாந்தி முற்போக்கா

என்ன சொல்லுது அதிமுக?

இண்டிகேடும் சிண்டிகேடும இந்தியாவின் சாபக்கேடு! தி. மு. க. வின் அடக்குமுறைக் கொள்கைகளை முறியடிப்போம! மத்திய—மாநில அரசுகளின் மக்கள் விரோதக் கொள்கைகளை முறியடிப்போம்! மின் வெட்டால் பாதிக்கப் பட்டவர்களுக்கு, நிவாரணம் கொடு! வேலை கொடு இல்லையேல் நிவாரணம கொடு! சீனி- மண்ணெண்ணெய் முறையாக வினியோகம் செய்!—

முதலிய முழக்கங்களை எழுப்பிக் கொண்டு முக்கிய வீதிகள் வழியே கலெக்டர் அலுவலகம அடைந்தது.

அங்கு தோழர் ஏ. பாலசுப்ரமணியம், திண்டுக்கல் தேர்தலில் மார்க்சிஸ்ட் கட்சி போட்டியிடுவது குறித்து விளக்கிப் பேசினர்.

பின்னர் தோழர் ஏ. பாலசுப்ரமணியமும், என் சங்கரய்யாவும் தேர்தல் அதிகாரியான மாவட்ட வருவாய்த் துறை அதிகாரி திரு கே. கோவிந்தனிடம் வேட்பு மனுவைத் தாக்கல் செய்தார்கள்.

தோழர் சங்கரய்யாவின் பெயரை தோழர்கள் என். வரதராஜன், எஸ் ஏ தங்கராஜன் ஏ. முனுசாமி ஆகியோர் முன் மொழிந்தனர்,

---

## அ.தி.மு.க...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

எதிர்த்தும் ஜனநாயக உரிமைகள் நசுக்கப்படுவதை எதிர்த்தும், உழைப்பாளி மக்கள் நடத்தும் போராட்டங்களை அடக்குமுறை கொண்டு இந்திரா காங்கிரஸ்சர்க்கார் நசுக்குவதை எதிர்த்தும், இந்திரா காங்கிரஸ் தன்னுடைய லட்சியமாகிய ஒரு கட்சி சர்வாதிகாரத்தை ஸ்தாபிப்பதற்காக பார்லிமெண்டரி ஜனநாயகக் கோட்பாட்டை நசுக்குவதை எதிர்த்தும், போராடிக் கொண்டிருக்கும் இடதுசாரி ஜனநாயக சக்திகளை அவர் பலப்படுத்தப் போகிறாரா என்பது முக்கியமான விஷயமாகும். இது, திமுக அரசின் லஞ்ச ஊழலையும் அடக்குமுறையையும் எதிர்ப்பதும் ஸ்தாபன காங்கிரஸ் கொள்கைகளை எதிர்ப்பதும் எவ்வளவு முக்கியமோ அதே அளவு முக்கியமானதாகும்.

திமுகவையும், ஸ்தாபன காங்கிரசையும் எதிர்க்கும் அதே சமயத்தில், இந்திரா காங்கிரசை கொள்கை ரீதியாக எதிர்க்கும் நிலையை அதிமுக இம்மாதம் 28-ந் தேதிக்குள் எடுக்கவில்லை என்றுசொன்னால் மார்க்சிஸ்ட கம்யூனிஸ்ட் கட்சி திண்டுக்கல் உப தேர்தல் சம்பந்தமாக எடுத்த முடிவை மறுபரிசீலனை செய்யும் பிரச்னை எழாது.

---

## மார்க்சிஸ்ட் தோழர்கள் மீது போலீசின் வெறித்தாக்குதல்
### டி, எஸ். பி. வருத்தம் தெரிவித்தார்

மதுரை கலெக்டர் அலுவலகத்தில் வேட்பு மனு தாக்கல்செய்ததையொட்டி ஊர்வலமாக வந்திருந்த தோழர்களில் சிலர், அங்குள்ள போலீஸ் நிலையம அருகில் உள்ள குழாயில் தண்ணீர் குடிக்கச் சென்றுள்ளனர்.

தண்ணீர்குடிக்கச்சென்ற தோழர்களில் சிலரைப் பிடித்து அங்கிருந்தபோலீஸ் நிலைய சப்- இன்ஸ்பெக்டரும் மற்றும் சில போலீசாரும் கடுமையாக தாக்கியுள்ளனர். உடனே அங்கிருந்த மற்றவர்கள் தலையிட்டின பேரில் அவர்கள் விடுவிக்கப்பட்ட பின்னர் மீண்டும் நான்கு தோழர்களை போலீஸ்நிலையத்துக்குஇழுத்துச் சென்று மிருகத்தனமாக அடித்துள்ளார் அந்த சப்-இன்ஸ்பெக்டர். ஒரு போலீஸ்காரர் சுட்டு விடுவேன்' என்று சொல்லி துப்பாக்கியைக் காட்டியுள்ளார்.

இந்த தகவல் தெரிந்தவுடன் அனைத்து தோழர்களும் போலீஸ் நிலையத்தின் முன்பு திரண்டு போலீசாரின திமிர்த்தனத்தைக் கண்டித்து கண்டன ஆர்ப்பாட்டம் செய்தனர்.

பின்னர் போலீசாரின் இந்த செயலுக்கு, உதவி கலெக்டர், ஆர் டி ஓ, டி எஸ் பி மற்றும் போலீஸ் அதிகாரிகள் வருத்தம தெரிவித்தனர்.

இதுகுறித்து உடனடியாக உரிய நடவடிக்கை எடுப்பதாக அவர்கள் கட்சித் தலைவர்களிடம் உறுதி கூறியுள்ளார்கள்.

போலீசார் இந்த அடாவடித்தனம் சம்பந்தமாக பெரிய போலீஸ் அதிகாரிகளிடம் புகார் ஒன்றும் செய்யப்பட்டுள்ளது.

### திட்டமிட்ட சதியா?

இதற்கு முன்ப, திமுக வேட்பாளர் வேட்புமனு தாக்கல் செய்ய வந்தபோது திமுக வினருக்கும் ஊழியர்களுக்கும் சிறு தகராறு ஏற்பட்டது.

அடுத்து நேற்று ஓரே நாளில் வேட்புமனுத் தாக்கல் செய்யவந்திருந்தபோது இந்திராகாங்கிரசாருக்கும சிண்டிகேட் காங்கிரசாருக்குமிடையே மோதல் ஏற்பட்டது.

அரசியல் கட்சிகளில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பு மனுத் தாக்கல் ஊர்வலம் மட்டும் கட்டுப்பாடாகவும் அமைதியாகவும் நடப்பதைப் பொறுக்காத தி. மு. க, அரசின் போலீசார், இத்தகைய கீழ்த்தரமான நடவடிக்கையில் இறங்கியுள்ளனர்.

---

# திண்டுக்கல் தேர்தல் தில்லுமுல்லுகள்
## என். சங்கரய்யா பேச்சு

மதுரை, ஏப். 23—

கேரளத்திலுள்ள எர்ணுகுளத்தில் நடந்து முடிந்துள்ள சி ஐ டி யூ-வின்மகத்தான இரண்டாவது மாநாட்டிற்குப் பின் இன்று இங்கு கூடுகிறோம்.

நம் நாட்டுப் பத்திரிகைகள் என்றுமில்லாத அளவுக்கு மாநாட்டுச் செய்திகளையும், அதன் தீர்மானங்களையும் பெரிதாகப் பிரசுரித்துள்ளன. இது எதைக் காட்டுகிறது.

### உறுதிமிக்க போராட்டங்கள்

இந்தியாவெங்கும் எண்ணற்ற பல போராட்டங்களை விட்டுக் கொடுக்காமல், உறுதியாக சி ஐ டி யூ தலைமை தாங்கி வெற்றிகரமாக நடத்தியுள்ளது.

சி ஐ டி யூ-வின் வர்க்க சமரசமற்ற உறுதியான தொழிலாளி வர்க்க நிலையைக்கண்ட லட்சக் கணக்கான தொழிலாளர்கள் சி. ஐ. டி. யூ. வின் தலைமையின் கீழ் அணிதிரண்டு வருகிறார்கள். தங்களது சீர்குலைவான திருத்தல்வாதத் தலைமைகளைத் தூக்கி எறிந்துவிட்டு, சி. ஐ. டி. யூ வின் தலைமையின்கீழ் அணி திரண்டு வருகிறார்கள்.

இந்த மாநாட்டின் வெற்றி இந்திய நாட்டில் உண்மையிலேயே ஒரு புரட்சிகரமான தொழிலாளி வர்க்க இயக்கம் வெகு வேகமாக வளர்ந்து வருகிறது என்பதைக் காட்டுகிறது.

இந்நிலையில் தமிழகத்தில் திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதி உப தேர்தல் இன்று தமிழக மக்கள் மத்தியில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

அதே சமயத்தில் இந்தத் தேர்தல் நியாயமாக நடக்குமா என்ற சந்தேகத்தையும் ஏற்படுத்தியுள்ளது.

சாதாரண வாக்காளர்கள் சுதந்திரமாக வாக்குச் சாவடிக்குச் சென்று வாக்களிக்க முடியுமா?

அரசுதரப்பில் எவ்வித நிர்பந்தமும் இன்றி வாக்களிக்க முடியுமா என்ற கேள்வி இன்று எழுந்துள்ளது.

### சுய விளம்பரம்

இன்று மதுரை நகரில் சிலடிரைவர்களுக்கு டாக்சிகள் (வாடகைக் கார்) கூட்டுறவு முறையில் வினியோகிக்கப்பட்டுள்ளன. பல நூற்றுக்கணக்கான டாக்சிகளை டிரைவர்கள் அனைவருக்கும் வழங்கி விட்டது போல் இதற்கு பிரமாதமான விளம்பரம் கொடுக்கப்பட்டது ஆனல் வழங்கப்பட்ட டாக்சிகளின் எண்ணிக்கை எத்தனை தெரியுமா? வெறும் 20 தான்.

இந்த டாக்சிகளை வைத்து சற்று அதிகமாக உழைத்து சம்பாதிக்கலாம் என்று அந்த டிரைவர்கள் நினைத்தார்கள்.

ஆனல் விட்டார்களா, திமுக தலைவர்கள்! அவர்களைப் பிடித்து தற்போது உங்களுக்கு டாக்சிகளை வழங்கியது ஏன் தெரியுமா? திண்டுக்கல் தேர்தலுக்கு வேலை செய்வதற்குத்தான் என்று கூறி அந்த டாக்சி டிரைவர்களை நிர்பந்தம் செய்துள்ளனர்.

ஆரம்பமே இப்படி என்றால் இனி என்னென்ன செய்வார்களோ?

எவ்வித அக்கிரமும், அநியாயமும்; தில்லுமுல்லும் இன்றி திண்டுக்கல் உப தேர்தலை நடத்துவோம் என்று அமைச்சர் நெடுஞ்செழியன் பேசியுள்ளாா.

ஆனல் நடப்பதென்ன ?

திண்டுக்கல் உபதேர்தல் நடைபெறும் தேதி அறிவிக்கப்பட்ட நாளிலிருந்து இன்று வரை இப்பகுதியில் அரசாங்க வேலைகள் ஜரூராக நடக்கின்றன, எல்லாம தேர்தல் நாளான மே 20ம் தேதி வரை தான்.

உதாரணமாக தாடிக்கொம்பு என்ற ஊருக்கு அருகிலுள்ள ஆற்றில்இரவு பகலாக பாலம் கட்டும வேலை நடந்து வருகிறது. எப்படியும் திண்டுக்கல் தேர்தலுக்கு முன் முடித்துவிட வேண்டுமென்று விரட்டு, விரட்டி வேலை வாங்குகிறார்கள்.

### படம் காட்டாதீர்

1967ம் ஆண்டில் ஆட்சிக்கு வந்த தி மு க அரசு 1973ம் ஆண்டு ஏப்ரல்மாதம் வரை இந்த வேலையைப்பற்றி நினைக்கவில்லை.

இப்போதுதான் — திண்டுக்கல் தேர்தல் தேதி அறிவித்த பின்புதான் இந்த வேலை துவங்கியுள்ளது.

இதே போல்தான் இத்தொகுதி முழுவதும் அரசாங்க வேலைகள் நடப்பது போல் படம காட்டப்படுகிறது. எங்கு பார்த்தாலும் இந்த ஊருக்குப்பாலம் கட்ட வேண்டுமா? கிணறு வெட்ட வேண்டுமா? ரோடு போட வேண்டுமா? அப்படியானல் தேர்தலில் எங்களை கவனித்துக்கொள்ள வேண்டும். ஓட்டுப் போட்டால் உங்கள ஊருக்கு இந்த வசதிகள் எல்லாம் ஓடி வரும் என்று பிரச்சாரம் செய்கிறார்கள். அதற்கான படம் காட்டும் வேலையிலும் ஈடுபட்டு வருகிறார்கள்.

உதாரணமாக,ஒரு ஊரில் பாலம் கட்டுகிறார்களா இல்லையோ அந்த ஊரில் பாலம் கட்டுவதுபோல் சுண்ணாம்புக் கோடுகளால் படம் வரைகிறார்கள், ஒரு வண்டி மணலைக் கொட்டுகிறார்கள் இரண்டு மூன்று ஆட்களை விட்டு அங்கு ஏதோ கட்டிடவேலை நடைபெறுவதுபோல் படம் காட்டப்படுகிறது கட்டத் துவங்கப்பட்டுள்ள இப்பாலம் முடிவடைய வேண்டுமானல் எங்களுக்கு ஓட்டுப் போடவேண்டும் என்று எங்கும் பிரச்சாரம் செய்கிறார்கள்.

வேலையில்லாமல் இருக்கும் பட்டதாரி இளைஞர்களை பயன்படுத்தும் நோக்குடன் 'இளைஞர் அணி' என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது இளைஞர்களுக்கு ரூ 175 சம்பளம் என்று நிர்ணயம் செய்து 1500 பேர்கள்தேர்ந்தெடுக்கப்பட்டு பணி செய்துகொண்டிருக்கிறார்கள்.

இவ்வாறு அரசாங்க ஊழியர்களையே தேர்தல் பிரச்சாரத்திகுப் பயன்படுத்தும் படுமோசமான நிலை தற்போதும் நிலவுகிறது.

இந்த நிலைமை நீடித்தால்—மேற்கு வங்கத்தில் இந்திரா காங்கிரஸ் தனது பாசிச அடக்குமுறை மூலமும் போலித் தேர்தல் நடத்தி வெற்றி பெற்றதைப்போல்தான் — இங்கும் தேர்தல் நடத்துவதில்தான் முடியும்.

எனவே எந்தக் கட்சியாக இருந்தாலும், ஆளும் கட்சியினர் செய்யும் இந்த தில்லுமுல்லுகளை எதிர்க்க முன்வர வேண்டும் என்று தோழர் என் சங்கரய்யா மதுரை திலகர்திடலில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

---

## வரி உயர்வை எதிர்த்து சர்வகட்சி ஆர்ப்பாட்டம்

மேலூர், ஏப் 24—

மேலூர் தாலுகா கொட்டாம்பட்டி ஊராட்சி ஒன்றியத்தில் அதிகமாக உயர்த்தியுள்ள சர்சார்ஜ் வரியை ரத்துச் செய்யக் கோரி 18–4–73ந்தேதி ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடந்தது,

இதில் சர்வகட்சி சாரபில், கு பக்தவத்சலம், மு அய்யாவு, மு. அழகர்தாஸ். (மார்க்சிஸ்ட்) ப வெ. சொ. முத்தையா, மு. முத்துக்கணபதி, பெரிய அடைக்கன் (ஸ்தாபன காங்கிரஸ்) தமிழ் மொழி, பிரமுகர்களும் (தி மு க) ஒரு சில பஞ்சாயத்து தலைவர்களும் மன்றத் தலைவர் க. வெ, வீரணன் அம்பலத்திடம் மன்றக் கூட்டத்தை ஒதுதிவைக்கும்படி நிர்ப்பந்திக்கவே தலைவரும், கூட்டத்தை ஒத்திவைத்ததாக அறிவித்து விட்டு தனது அறைக்குள் சென்று விடடார்.

பின்பு அறையிலிருந்த மன்றத் தலைவரிடம் சர்வகட்சித் தலைவர்கள் சென்று உயர்த்திய வரியை ரத்து செய்யக் கோரும்



சி. செல்லம், (தி. மு. க) பெ, கிருஷ்ணன், (அ. தி. மு. க.) மு. சி. கருப்பையா பாரதி (த. அ. கழகம்) கரு, ராமையா (சுதந்) எஸ் வி. மங்கையன் (இ. காங்கிரஸ்) ஆகியோர் தலைமையில் 700-க்கு மேற்பட்ட விவசாயிகள் கலந்துகொண்டு வரியை ரத்து செய், ரத்து செய்யாவிட்டால் போராடுவோம் என்று முழக்கமிட்டு கொண்டுஊராட்சி ஒன்றிய அலுவலகம் நோக்கி சென்றனர்.

மக்கள் கூட்டம் வருவதைக் கண்ட ஆளும் கட்சி மனுவைக் கொடுத்துபேசும் போது, 30—4—73-ல் மீண்டும் கூட்டத்தைக் கூட்டி தீர்மானம் நிறைவேற்றி வரியை ரத்து செய்வதாய் கூறினர்,

பின்னர் மன்றக் கட்டிடத்தின் முன்பு நடைபெற்ற கூட்டத்தில் 30—4—73-ந் தேதிக்குள் ஷை வரியை ரத்து செய்யும் நடவடிக்கை எடுக்காவிட்டால் மீண்டும் பல்வேறு விதமான போராட்டங்களை நடத்துவது என்று முடிவு செய்யப்பட்ட பின் மக்கள் கூட்டம் கலைந்தது.

---

## தோழர் என். சங்கரய்யாவுக்கு பொறுப்புத்தொகை அளித்தனர்
### மதுமரத் தொழிலாளர்கள் உற்சாகம்

மதுரை, ஏப் 25—

திண்டுக்கல் நாடாளுமன்ற உபதேர்தலில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் போட்டியிடும் தோழர் என். சங்கரய்யா இன்று கலெக்டர் அலுவலகத்தில் வேட்பு மனு தாக்கல் செய்யச் சென்றபோது, ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் அவரை ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள்.

"பாட்டாளி வர்க்கத்தின் உரிமைக்குரலை பாராளுமன்றத்தில் ஒலிக்கதிட, தோழர் சங்கரய்யா தான் தகுதியானவர்; தனது 35 ஆண்டுகால அரசியல் வாழ்வில் எந்தவிதமான சொத்துச் சுகங்களையும் நாடாதவர்; தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்கள், நடுத்தர மக்கள் நல வாழ்வுக்காகவும், நாட்டில் ஜனநாயகம் தழைத்தோங்கி மக்களாட்சிமலர்ந்திட காலமெல்லாம் பாடுபட்டவர்.

அன்னிய ஆட்சிக் காலத்தில் நாட்டின் விடுதலைக்காக பல்லாண்டுகள் சிறைத்தண்டனை அனுபவித்தவர்.

காங்கிரஸ் ஆட்சிக்காலத்திலும் சிறையில் அடைக்கப்பட்டு, பலவித அடக்குமுறைக் கொடுமைகளுக்கு ஆளானவர்.

நாட்டில் நல்லாட்சி மலர வேண்டுமென்பதற்காகவும்-உழைக்கும் மக்களுக்கு வாழ்க்கைக்கேற்ற ஊதியமும, விலைவாசிக் குறைப்பும், கடன் ஒழிப்பும், உழவர்களுக்கு நிலமும், மாணவர்களுக்கு ஜனநாயக உரிமைகளும் வழங்கிட வேண்டுமென்று ஓயாது பாடுபட்டு வருபவர்.

மதுமரத் தொழிலாளர்கள் பாதிக்கப்பட்ட காலங்களிலெல்லாம தோழர் சங்கரய்யாவும், அவரது கட்சியினருமதான் ஓடோடி வந்து வழிகாட்டிப் பாதுகாத்தவர்கள்.

### மதுமரத்தொழிலாளர் 250 ரூபாய் அளித்தனர்

இத்தகைய ஒரு பொது ஜன ஊழியருக்கு—மக்களின் சேவையில் தன்னை முழுவதுமாக அர்ப்பணித்த ஒரு சிறந்த தலைவருக்கு—வேட்புமனு தாக்கல் செய்வதற்கான பொறுப்புத்தொகையைத் தொழிலாளர்கள் கொடுக்க முன் வந்தார்கள்.

அவர்களில் மதுரை தாலுகா மதுமரத் தொழிலாளர்கள் சார்பாக, டிபாசிட் தொகையின் ஒருபகுதியான ரூ. 250-ஐ கலெக்டர் அலுவலகத்தின் முன் வைத்து, தோழர் சங்கரய்யாவிடம் தோழர் கே பி ஜானகியம்மாள் கொடுத்தார்.

மதுரையில் உள்ள குட்டப்பன் எனும் கேரளத் தோழர் ஒருவர் வந்து ரூ, 15 கொடுத்துவிட்டுச் சென்றார்.

மதுரைத் தாலுகா பிபி சாவடி கிளையின் சார்பாக சுத்தியல் அரிவாள் நட்சத்திரம் பொறிக்கப்பட்ட மோதிரம் ஒன்றை அளித்தனா.

---

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சாரபில், தீக்கதிர் அச்சகத்தில்(13-முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே. முத்தையா.